# லாரியில் புலி



**எஸ்.** ஆர். வி. எஸ். லாரி சர்வீஸ் மானேஜர் திரு. கணபதியிடம் பேசிக்கொண்டிருந்தேன். "என்ன ஸார், உங்க நிறுவன லாரி தினம் பேப்பர் பேல், அரிசி மூட்டை என்று சுமந்து போவதுடன் சரி; கொஞ்சமும் பரபரப்பில்லாத சமாச்சாரம்" என்றேன் பேச்சுவாக்கில்.

"அப்படியா நினைக்கிறீர்? நாளை காலை 6 மணிக்குக் கிளம்பி வந்து விடு. ஒரு வேடிக்கை காட்டுகிறேன்" என்றார். நானும் ஆவல் மீதூறப் போனால் திரு. கணபதியும் காட்டிலாக்கா அதிகாரிகளும் இரு சிறுத்தைக் குட்டிகளைக் கூண்டுடன் லாரியில் ஏற்றிக் கொண்டிருந்தார்கள்!

சென்னை, வண்டலூர் மிருகக் காட்சி சாலையிலிருந்து இவை பம்பாய்க்கு அனுப்பப் படுகின்றன. பம்பாய் மிருகக் காட்சி சாலையில் சிறுத்தையே இல்லாத குறையைப் போக்க ஆண் சிறுத்தை பின்டோவும் பெண் சிறுத்தை லக்ஷ்மியும் போகின்றன. கணவன் மனைவியாக அங்கே தனிக்குடித்தனம் நடத்தப் போகின்றன!

இவற்றுக்குப் பதிலாக பம்பாய் ஸூ, புளுபுல் எனப்படும் அரிதான ஒருவகை மான்கள் ஒரு ஜதை அனுப்பப்போகிறது. தவிர குஜராத்திலுள்ள ஜூனாகாத் மிருகக் காட்சி சாலையிலிருந்து இரு சிங்கக்குட்டிகளையும் இதே லாரி திரும்பி வரும்போது ஏற்றிவரும்! சிங்கக் குட்டிகள் ஒவ்வொன்றும் இருபதாயிரம் ரூபாய்!

பின்டோ, லக்ஷ்மி இரண்டுக்கும் தினசரி நான்கு கிலோ இறைச்சி போட்டு வளர்த்தார்களாம். இந்தத் தகவலைக் கூறிய சென்னை மிருகக்காட்சி சாலை இயக்குனர் திரு. நாயுடு, லாரி புறப்படும்போது குழந்தைகளைப் பிரிவது போல உணர்ந்து கண்ணீர் மல்க நின்றது என் மனத்தையும் நெகிழச் செய்தது.

படம், தகவல்: **சித்தி**



# ஃப்ளாஷ் கார்டன்

**வே**ற்று கிரகங்களிலும் உயிரினங்கள் உள்ளன என்ற நம்பிக்கை ஓர் அலாதியான பரபரப்பையும் அச்சத்தையும் நம் உள்ளங்களில் ஏற்படுத்துகிறது. இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டு பின்னப்பட்ட கதைகளுள் ஒன்றுதான் ஃப்ளாஷ் கார்டன் திரைக்கதை. அந்தக் கண்காணா உலகத்தின் உயிர்கள் நாம் பூவுலகில் காணும் உயிர்களைவிடப் பன்மடங்கு ஆற்றலும் பலமும் கொண்டவை. மிகக் குரூரமானவை. மனித இனத்தின் வீழ்ச்சிக்கே காரணமான பதவி வேட்கையும் 'தான்' என்ற அகந்தையும் மாங்கோ கிரகத்து உயிர்களையும் ஆட்டுவிக்கிறது. பூவுலக விஞ்ஞானி சார்கோவ் உலகமே அழியப் போகிறது என்று தன் கம்ப்யூட்டர்களால் அறிந்து மனித இனத்தைக் காப்பாற்றுவதற்காக வீர இளைஞன், ஃப்ளாஷ் கார்டனையும் அவனது காதலி டேலையும் விண்வெளியில் கடத்திச் செல்கிறார். மின் அலைகளைப் பயன்படுத்திப் பிரமிப்பூட்டும் சாகசங்களை நிகழ்த்த ஆரம்பிக்கிறார். மாங்கோ கிரகத்து அரசன் மிங்கின் ஆட்கள் இந்த மூவரையும் கைது செய்து மிங்கின் முன் நிறுத்துகின்றனர். கற்பனைக்கு எட்டாத பல சித்திரவதைகளைத் தாங்கிக் கொண்டு, தனித்தனியாகச் சிறைப்படுத்தப் பட்ட இந்த மூவரும் சாமர்த்தியமாகத் தப்பி, மிங்கை பூண்டோடு அழித்து விடுகின்றனர். பிரபல 'சித்திரத் தொடரை கதையுள்ள கட்டுக்கதையாக்கிப் படமெடுத்துள்ளனர். குழந்தைகள் குதூகலிக்க, பெரியோர்கள் பரவசமடைய இப்படத்தைப் பார்க்கலாம்.

—டி. எம். ஆர்.

# எஸ்.டி.எஸ்ஸுடன் எட்டு மணி நேரம்!

## சிறப்புப் பேட்டி

மூன்று நான்கு நாட்கள் (இடையில் ஒரு கார் பயணம் வேறு) நடந்த இந்த எட்டு மணி நேரப் பேட்டி எஸ்.டி.எஸ். காட்சிக்கு எளியவர் கடுஞ்சொல் பேசாதவர் என்பதைத் தெளிவாக விளக்கிற்று. கல்லிலிருந்து நார் உரிப்பதும் இவரிடம் பதில் வாங்குவதும் ஒன்றுதான். ஆனாலும் உணர்ச்சி வசப்பட்டால்மனத்தில்பட்டதை இயல்பாகப் பேசி விடும் எஸ். டி. எஸ். இன்றைய சந்தர்ப்பவாத அரசியல்வாதிகளிடையில் ஒரு மாறுபட்ட மனிதர் என்பதையும் இப்பேட்டி உணர்த்தியது.



''நானும் ஒரு மாணவன் தான். நீங்கள் எப்படி என்று கேட்பீர்கள். என் மனத்தை மாணவ நிலையில் வைத்திருக்கிறேன். அதனால் மாணவர்களான உங்களிடம், அதே மனநிலையோடு என்னால் பேச முடிகிறது'' – இலங்கைப் பிரச்னையில் ஊர்வலம் சென்று போலீஸாரின் தாக்குதலுக்கு உள்ளான மாணவர்களிடையே எஸ்.டி.எஸ். அவரது வீட்டில் பேசிக் கொண்டிருந்தார். (படம்) மாணவர்கள் உணர்ச்சி வசப்பட்டு அங்கு குழுமியிருந்தனர். ''நீங்கள் உங்கள் உணர்வுகளைத் தெரிவிக்கும் வகையில் ஒருநாள் ஊர்வலம் போனீர்கள். இதோடு நிறுத்திக் கொள்ளுங்கள். உங்கள் குடும்பத்தை எண்ணிப் பாருங்கள். நீங்கள் படித்துத்தான் உங்கள் குடும்பம் கரையேற வேண்டும். போராட்டங்களில் அதிக அளவில் இறங்குவது பற்றிச் சற்று யோசிக்க வேண்டும். நீங்கள் அடிபட்டிருப்பது கண்டு என் நெஞ்சம் பதறுகிறது. ஆனால் நானும் உணர்ச்சி வசப்பட்டு எதுவும் பேசிவிட முடியாது. உங்களுடைய உணர்வுகளை முதல்வரிடம்தெரிவிக்கிறேன்.'' ''வந்திருந்த



மாணவர்கள் அமைதியாகக் கேட்டது ஆச்சரியமாக இருந்தது.

• • • •

மறுநாள்.

அமைச்சருடன் திருவண்ணாமலைக்குப் பயணம்.

''உங்கள் குடும்பமே திராவிட உணர்வுள்ள குடும்பமா?''

அவரது நினைவைக் கிளறி விடுகிறேன்.

''எனக்குச் சொந்த ஊர் பட்டுக்கோட்டையை அடுத்துள்ள சேந்தன் காடு என்ற கிராமம். ஆனால் நான் படித்தது (மூன்வது முதல்), அதிராம்பட்டிணம் அருகில் உள்ள ராஜாமடம் என்ற தங்கிப் படிக்கும் பள்ளியில் தான். ஒருநாள் அருகிலுள்ள நகர் ஒன்றில் பெரியார் (அப்போது பெரியார் என்று போட மாட்டார்கள்; ராமசாமி என்றோ ராமசாமி நாயக்கர் என்றோ தான் போடுவார்கள்) பேசுவதாக இருந்தது. எனக்குப் பெரியாரைப் பற்றி எதுவும் தெரியாது. எனக்கு ஸீனியர் மாணவர்கள் என்னை அந்தக் கூட்டத்துக்கு அழைத்துச் சென்றார்கள். பிறகு விடுதிக்குத் திரும்பி வந்தால் எனக்கு அபராதம் போட்டு ஆப்ஸெண்ட் வேறு போட்டு விட்டார்கள். அந்தக் கூட்டத்திற்குப் போய் வந்ததே தவறு என்ற பாணியில் ஆசிரியர்கள் பேசினார்கள். இதுதான் என்னை யோசிக்கவைத்தது. பிறகு தான் பெரியார் கொள்கைகளையும் அவரையும் புரிந்து கொள்ள ஆரம்பித்தேன். அந்தக் கால கட்டத்தில் நாடே விடுதலை உணர்ச்சியில் பொங்கி இருந்ததால் நான் படித்த அந்தப் பள்ளியில் பெரும்பாலும் காங்கிரஸ் மாணவர்களே அதிகம் இருந்தார்கள். ஆனால் என்னைப் பொறுத்த மட்டில் அன்புடன் பழகினார்கள். அதே மாணவர்கள் தான் பின்னர் நான் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இண்டர் சேர்ந்த





போது, மதியழகன் போன்றவர்களுக்கு, ''திராவிட இனப்பற்று உள்ளவன்'' என்று கூறி அறிமுகம் செய்து வைத்தனர்.''

''உங்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து அனுபவத்தைச் சற்று சொல்லுங்களேன்.''

''குறிப்பிட்டுச்சொல்லுவதென்றால்ஓட்டப் பந்தயங்களில் நான் வெற்றிவாகை சூடியது தான் என்னை ஏராளமான மாணவர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்தது. தமிழ் மன்றத்துக்கு மதியழகன் தலைவராக இருந்தார். பிற்காலத்தில் பிரபலமான பல தி. மு. க. தலைவர்கள் அப்போது அங்கு படித்துக் கொண்டிருந்தனர். முதன் முதலாக அண்ணாவைச் சந்தித்ததும் அங்கு தான். தமிழ் மன்றத்திற்குப் பேச வந்திருந்தார். அவரது பேச்சில் மயங்கி, அதன்பின் அவர் கலந்து கொண்ட எல்லா மகாநாடுகளுக்கும் சென்றிருக்கிறேன். முக்கியமாக ஈரோடு மாநாட்டைக் குறிப்பிடலாம். பெரியாரே அண்ணாவை அந்த மாநாட்டுத் தலைவராக அமர்த்தி, அவரைச் சிறப்பித்தார். நான் என்னுடன் பல மாணவர்களை அழைத்துப் போயிருந்தேன். சரியான வசதி இல்லாததால் மாணவர்களுக்குச் சாப்பாடு போடுவதில் சிரமம் இருந்தது. கூட்டம் வேறு எக்கச்சக்கம். பெரியாரிடத்தில் சென்று நிலைமையைச் சொன்னேன். அதற்கு அவரோ, ''உங்களுக்கு சற்று கூட பொறுமை கிடையாது. எக்கச்சக்கமாக அரிசி, பருப்பு, காய்கறி என்று வாங்கிக் கொட்டிக் குவித்துள்ளேன். நீங்கள் பொறுமையாகக் காத்திருந்தால் சாப்பாடு கிடைக்கும்'' என்று கூறி என்னைத் திருப்பி அனுப்பினார். சாப்பாட்டிற்கு காத்திருந்தால் எங்கே மாநாட்டு நடவடிக்கைகளைக்கோட்டைவிட்டு விடுவோமோ என்று கருதி, சாப்பாட்டைத் தியாகம் செய்ய வேண்டியதாயிற்று!''

''1949—ல் தி. மு. க. தோன்றிய போது உடனடியாக நீங்கள் அண்ணாவின் பக்கம் சேர்ந்து விட்டீர்களா?''

''ஆமாம்! பெரியாரின் 'அந்த' நடவடிக்கை பிடிக்காமல் அண்ணா அவர்கள்

விலகியிருந்த நேரம் அது. யார் யாருக்கு அது பிடிக்கவில்லையோ, அவர்களை 'கண்ணீர்த் துளிகள்' என்ற தலைப்பில் திராவிட நாடு இதழில் வெளியிட்டுக் கொண்டிருந்தார். நானும், தினமும் பல கிராமங்களுக்குச் சென்று கண்ணீர்த் துளிகளுக்கான பட்டியலுக்கு ஆட்களைச் சேகரித்து 'திராவிடநாடு' இதழிற்கு அனுப்பி வைப்பேன். அப்போது ஏ. பி. ஜனார்த்தனம் என் அறையில் தங்கியிருந்தார். அவர் பெரியாரை ஆதரித்துப் பிரச்சாரம் செய்து விட்டு வருவார். நான் அண்ணாவை ஆதரித்துக்கண்ணீர்த் துளிகள் பட்டியலைக் கொண்டு வருவேன். ஆனால் இரவு இருவரும் சேர்ந்தே சாப்பிடுவோம். உலாவப் போவோம். ரொம்ப வேடிக்கையாக இருக்கும்.''

''நீங்கள் குறிப்பிட்ட காலத்திற்கும் அதிகமாக அண்ணாமலையில் படித்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அது உண்மையா?''

''ஆமாம். நான் பொறியியல் படித்தேன். தி. மு. க. மாணவர் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு, பல்வேறு மாநாடுகள், மீட்டிங்குகள் என்று வெளியூருக்கு அடிக்கடி சென்று வந்ததால் டெர்ம் டேஸ் குறைந்து இரண்டு மூன்று தடவை பரீட்சை எழுத முடியாமல் போயிற்று. 1955-ல் படிப்பை முடித்திருக்க வேண்டிய நான் 1959-ல் தான் முடித்தேன்.''

''நீங்கள் எம். ஜி. ஆரை முதன் முதலாக எங்கு சந்தித்தீர்கள்?''

''1953 முதலே கழகத்திற்காகப் பாடுபடும் கலைஞர்களில் ஒருவர் என்ற வகையில் அவரிடம் எனக்குப் பற்றும் பாசமும் உண்டு. 1967-ல் அவர் குண்டடிப்பட்டு ஆஸ்பத்திரியில் இருக்கும் போது நான் தஞ்சைப் பாராளுமன்றத் தேர்தலில் தி. மு. க. வேட்பாளராக இருந்தேன். என்னை எதிர்த்து ஆர். வி. அவர்கள் காங்கிரஸ் சார்பில் நின்றார்கள்.''

அவரை இடைமறித்து, ''ஆமாம் ஆர். வி குடும்பம் உங்கள் குடும்பத்துக்கு மிக நெருக்கமானது என்று சமீபத்தில் நடந்த புது மாவட்டப் பணி தொடக்க விழாவின் போது பேசினீர்களே அதுபற்றிச் சொல்ல முடியுமா?'' என்று கேட்டேன்.

''ஆர். வி. அவர்களது ஊர் சீர்காழியிலிருந்து சிறிது தொலைவுதான். அவர் அப்பா பட்டுக்கோட்டையில் வக்கீலாக இருந்தார். நான் சிறுவனாக இருந்தபோது பட்டுக்கோட்டைக்குச் சினிமாவிற்குச் சென்றால், இரவில் ஆர். வி. வீட்டில் தங்கி விடுவேன். ஏனென்றால் கிராமத்திற்குத் திரும்பி வர பஸ் வசதி கிடையாது. இவ்வாறு சிறுவயதிலிருந்தே பழக்கம். ஆனால் ஆர். வி. அவர்களை அந்தத் தேர்தலில் எதிர்த்து நிற்கும்படி ஆயிற்று. என்னிடம் அவர் தோற்றுப் போனார்...'' என்று கூறிப் பழைய நினைவில் ஆழ்ந்தார் எஸ். டி. எஸ்.

''எம். ஜி. ஆர். குண்டடிபட்டு'' என்று மீண்டும் விஷயத்தை நான் கிளறியபோது அவர் ஆரம்பித்தார்:

''எனக்கு எம். ஜி. ஆரைப் பார்க்க வேண்டும் போல இருந்தது. சென்னை வந்து ஆஸ்பத்திரியில் எம். ஜி. ஆரைப் பார்த்தேன். அவர், ''நீங்கள் போங்கள். எனக்கு ஆபத்தில்லை'' என்று கூறி அனுப்பி விட்டார். பிறகு 1969-ல் இந்தி எதிர்ப்புப் போரில் உயிர்நீத்த அண்ணாமலை மாணவர் ராஜேந்திரனுக்குச் சிலை வைப்பது சம்பந்தமாகச் சந்தித்தேன். சிலை வைக்கும் செலவுகளுக்கு 3000 ரூபாய் குறைந்தது. எம். ஜி. ஆரிடம் கேட்டால் என்ன என்று தோன்றிற்று. தொலைபேசியில் கேட்டவுடன் நேரில் வரச் சொன்னார். 5000 ரூபாயாகக் கொடுத்தார். நானோ '3000 ரூபாய் போதும்' என்று சொன்னேன். ஆனால் அவர், 'உங்களுக்குத் தெரியாது. செலவு அதிகமாக ஆகும்' என்று 5000 ரூபாயை என் கையில் திணித்தார். அவரது தாராள மனப்பான்மையை எண்ணிப் பெருமைப்பட்டேன் நான். 1972-ல் கட்சியிலிருந்து எம். ஜி. ஆரை நீக்கி விட்டார்கள். அப்போது நான் எம். பி. எம். ஜி. ஆர். சந்திக்க விரும்புவதாக எனக்குத்தெரிவிக்கப்பட்டது. நான் சென்று பார்த்தேன். ''கட்சி நன்றாக இருக்கிறது. சேருங்கள்'' என்றார். ''கட்சி நன்றாக இருக்கிறது என்பதற்காக நான் சேர வேண்டியதில்லை. கட்சி எப்படி இருந்தாலும் உழைத்துக் கட்சியைக் காப்பாற்றுவோம்'' என்றேன். ஆனால் சேருவதற்கு முன்னர் என் தொகுதி மக்களிடத்தில் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்று கூறினேன். ''நீங்கள் உங்கள் நண்பர்களுடன் கலந்து ஆலோசித்துச் சேர்வதே நல்லது'' என்று சொன்னார்.''

கார் திருவண்ணாமலை நகரத்துக்குள் நுழைந்தது. எஸ். டி. எஸ். நேராக ப. வு. சண்முகத்தின் மணிவிழா நடக்கும் கல்யாண மண்டபத்திற்குச் சென்றார். அங்கு வந்திருந்த ஒரே அமைச்சர் அவர்தான். ப. வு. ச. வுக்குப் பொன்னாடை போர்த்தி வாழ்த்தினார். பிறகு எஸ். டி. எஸ்., ப. வு. ச., மாதவன் (அ. தி. மு. க. பொருளாளர்) மூவரும் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தார்கள்.

மாலை நான்கு மணியளவில் சென்னைக்குக் கிளம்பினோம்.

''எம். ஜி. ஆரை கட்சியை விட்டு விலக்கியது பற்றி நீங்கள் என்ன கருதினீர்கள்?'' என்று மறுபடியும் பேட்டியை ஆரம்பித்தேன்.

''முறைப்படி ஒரு ஷோ-காஸ் நோட்டீஸ் கூடக் கொடுக்காமல் அவரை நீக்கியது எதேச்சாதிகாரச் செயல் என்று நான் கருதினேன்.''

''எம். பி. யாக இருந்த நீங்கள் தைரியமாக அ. தி. மு. க. வில் சேர்ந்தது பற்றிச் சொல்ல முடியுமா?''

''கட்சியினால் எம். ஜி. ஆருக்கு லாபம் என்று சிலர் கூறினார்கள். அதை எண்ணிப் பார்ப்பது எம். ஜி. ஆரின் வேலை. எம். ஜி. ஆரினால் கட்சிக்கு லாபமா நஷ்டமா என்று பார்ப்பது தொண்டர்களின் கடமை. எம். ஜி. ஆரினால் கட்சிக்கு மிக, மிக, லாபம் என்று மற்றவர்களிடத்தில் (ஏன் சகலரு



Smt. RENGAMONY

In fond and affectionate memory of

## Smt. RENGAMONY

**Born : 25-3-1925**

**Died : 29-8-1972**

**Beloved wife of S. Padmanabhan Affectionate mother of Jana and Kanna, mother-in-law of J. Gopalan & Malathy, Grandmother of Sandhya & Srinivas**

## அடுத்த வாரம்



# அநீதிக்குத் தலைவணங்காதவர்

**என். டி. ராமாராவ் வண்ணப்படம்**

**+ சிறப்புக்கட்டுரை**

---

ரிடம்மே) வாதாடினேன். உண்மையும் அதுதான். இந்த எண்ணத்தில் தான் அவர் கட்சி ஆரம்பித்த போது, என்னை இணைத்துக் கொண்டேன்.''

''சமீப காலங்களில் அண்ணா பவளவிழா கூட்டங்களில் நீங்கள் பேசிவரும் பேச்சு கட்சியில் சற்று சலசலப்பைத் தோற்றுவித்திருக்கிறதே?''

''அண்ணா பவள விழாவில் அண்ணாவைப் பற்றித்தான் பேச முடியும்.''

''நீங்கள் அண்ணாவை மட்டும் தான் தலைவராக ஏற்றுக் கொண்டுள்ளேன் என்று பேசியது தான் சலசலப்புக்குக் காரணம்'' என்று நான் சொன்னவுடன், ''அண்ணாவுக்கு இணையாக யாரையாவது என்னால் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது'' என்று கூறி நிறுத்தி விட்டார்.

''அவ்வளவு தூரம் அண்ணா அவர்களைத் தலைவர் என்று கூறி நீங்கள் பேசிவரும் அளவுக்கு அண்ணா' அவர்கள் உங்களைக் கவர்ந்தது எப்படி என்று கூற முடியுமா?''

''1944—ல் நடந்த சுயமரியாதை இயக்க மாநாட்டில், அண்ணா அவர்கள் ''தேர்தலுக்கு நின்று வெற்றி பெற்றால் சமுதாயத் தொண்டு மறந்து விடும் என்ற நோக்கில் தேர்தலில் நிற்கக் கூடாது என்று தீர்மானம் கொண்டு வந்தார். ஜாதிகள் பெயரைப் போட்டுக் கொள்ளக் கூடாது என்றும், வெள்ளைக்காரர்கள் கொடுத்த ''ஸர், ராவ் பகதூர்'' என்ற பட்டங்களையும் தூக்கியெறிய வேண்டும் என்றும் தீர்மானங்களைக் கொண்டு வந்தார். அண்ணாவின் இந்தத் தீர்மானங்கள் எனக்கு மிகவும் பிடித்திருந்தன. உலக யுத்தத்துக்கு ஆதரவாக நீதிக்கட்சி பிரச்சாரம் செய்ய வேண்டும் என்று தீர்மானித்த போது, பிரச்சாரம் செய்தால் பணம் நிறையக் கிடைக்கும் என்ற நிலையில் கூட ''விடுதலைக்கு ஆதரவாக இருந்த அண்ணா அவர்கள் பிரச்சாரத்துக்குச் செல்லவில்லை. பணத்துக்காகக் கொள்கையை அண்ணா மாற்றிக் கொள்ள மாட்டார் என்பது இதிலிருந்து தெரிய வரும். அண்ணாவிடம் என்னைக் கவர்ந்த இன்னொன்று நாடகங்கள் திரைப்படங்கள் போன்றவற்றால் சமுதாயத்திற்கு நல்ல கருத்துக்களைக் கொடுத்தது. (இந்த இடத்தில் அண்ணா அவர்களின் வேலைக்காரி திரைப்படத்தைப் பற்றிய ஒரு நீண்ட விமர்சனமே செய்து முடித்தார் எஸ். டி. எஸ்.)

ஈரோடு மாநாட்டில் அண்ணாவையே தலைவராக பெரியார் நியமித்தது அண்ணாவிடம் அவருக்கிருந்த நம்பிக்கையை வெளிப்படுத்தியது. அண்ணா என் மனத்தில் பசுமையாக நிலைத்திருக்க இவையெல்லாம் தான் காரணங்கள்'' என்று கூறி முடித்தார்.

''அ. தி. மு. க. வின் ஆரம்ப காலங்களில் அதன் வளர்ச்சிக்கு உங்கள் பங்கு மிக, மிக அதிகம் என்று தொண்டர்கள் கூறுகிறார்களே!''

''அ. தி. மு. க. முதன் முதலாகச் சந்தித்த திண்டுக்கல் பாராளுமன்றத் தேர்தலில், நான் தான் தேர்தல் பணிக்குத் தலைவன். அந்தத் தேர்தலில் அ. தி. மு. க. எத்தகைய இடர்பாடுகளைக் களைந்துவெற்றியை அடைந்தது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. பிறகு பாண்டிச்சேரி சட்டமன்றத்தேர்தலில் வேட்பாளர்களைத்தேர்ந்தெடுத்தது மட்டுமில்லாமல், தேர்தல் பணிக் குழுத் தலைவராக இருந்து பாடுபட்டேன். அங்கு அ. தி. மு. க. பெரும்பான்மை பலம் பெற்று ஆட்சி அமைத்தது.''

(சென்னைக்கு வந்து சேர்ந்த பிறகும் அடுத்த இரண்டு, மூன்று தினங்களில் பேட்டி விட்டு விட்டுத் தொடர்ந்தது.)

''கட்சியில் உள்ள பலர் சொத்து சேர்த்து விட்டார்கள்'' என்று கூறப் போய்த்தான் எம். ஜி. ஆர். கட்சியை விட்டு வெளியேறும் நிலை உண்டாயிற்று. ஆனால் உங்கள் கட்சியில் இதுவரை யாரும் கணக்குக் காட்டியதாகத் தெரியவில்லையே?''

இதற்குப் பதிலளிக்காமல் சிரிக்கிறார் எஸ். டி. எஸ். அவர் மனத்திலுள்ள கோபம் நமக்குப் புரிகிறது. ஆனாலும் கட்சிக்கட்டுப்

பாட்டைக் கருதி வார்த்தைகளை அளந்து பேசுகிறார்:

''கணக்குகளைக் காட்ட அ. தி. மு. க. வினர் தயாராக இருக்கவேண்டும்.''

''கட்சி எப்படி இருக்க வேண்டும் என்று கருதுகிறீர்கள்?''

''தூய்மையாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன். தவறு செய்பவர்கள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும். ஆரம்ப காலத்தில் வந்தவர்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும். 1980—ல் செல்வாக்குப் பெற்று மீண்டும் ஆட்சிக்கு வந்த போது, 'இந்தக் கட்சியை இனி யாரும் ஒன்றும் செய்ய முடியாது' என்று பலர் வந்து சேர்ந்தார்கள். அப்படி வந்து சேர்ந்தவர்களில் சுயநலமில்லாமல் வந்தவர்களைப் பாராட்டுகிறேன். ஆனால் 'கட்சியைப் பயன்படுத்திக் கொண்டு, தான் செல்வாக்காக இருக்கவேண்டும்; சம்பாதிக்க வேண்டும்' என்று கருதுபவர்கள் உடனடியாக வெளியேற்றப்பட வேண்டியவர்கள். ஆனால் துரதிர்ஷ்டவசமாகப் பின்னால் நான் குறிப்பிட்டவர்கள்தான் கட்சியில் தற்போது செல்வாக்கோடு விளங்கி வருகிறார்கள்.''

''தவறான முறையில் பணம் சேர்த்தவர்கள் யார், யார்?''

''இது முதல்வருக்கே நன்றாகத் தெரியும். அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கவேண்டியது அவர் கடமை. ஆனால் அவர் செய்யவில்லையென்றால் கட்சியின் நலன் கருதி, நான் பெயர்களை வெளியே சொல்ல வேண்டி வரும்...''

அண்ணா பவள விழா கூட்டங்களில் கள் — சாராயத்தின் தீமைகளைப் பற்றி அதிகமாக எடுத்துக் கூறினீர்களே!''

''கள் — சாராயத்தால், நம் சமுதாயத்தை எப்படிச் சீரழித்துக் கொண்டிருக்கிறோம் என்பதை நினைத்தால் வயிறு பற்றி எரிகிறது. அண்ணா அவர்கள் மதுவிலக்கை ரத்துச் செய்யக் கூடாது என்று பிடிவாதமாக இருந்தார். கள் — சாராயத்தின் தீமைகளை வெவ்வேறு சந்தர்ப்பங்களில் அவர் கூறியது என் நெஞ்சில் பதிந்திருக்கிறது. கலைஞர் காலத்தில் மதுவிலக்கை ரத்து செய்து மக்களைப் பழக்கியதால் மீண்டும் உடனே மதுவிலக்கைக் கொண்டு வருவது கடினம் என்று கூறுவதை நான் ஏற்றுக் கொள்ள முடியாது. இந்த அரசு ஏன் தயங்குகிறது அல்லது தாமதப்படுத்துகிறது என்று கேட்கிறார்கள். அப்படிக் கேட்பதில் நியாயம் இருக்கிறது. சிறு வயதில் என் அப்பார் (தஞ்சாவூர் பாஷை) முன்னால் கள் — சாராயம் குடித்தவர்கள் யாரும் வர மாட்டார்கள். அந்த வயதிலேயே கள் சாராயம் சாப்பிடுவது மிகப் பாவமான காரியம் என்பது என் மனத்தில் பதிந்திருந்தது.''

''காஷ்மீரிலும் சமீபத்தில் ஆந்திராவிலும் இ. காங்கிரஸ் ' எதிர்க்கட்சி ஆட்சிகளைக் கவிழ்த்தது. அது போன்ற ஒரு நிலை இங்கு ஏற்படுமா?...''

''1971 தேர்தலில் கலைஞர் — இ.காங்கிரஸ் கட்சியுடன் கூட்டு சேர்ந்த போது எதிர்த்தவன் நான். இ.காங்கிரஸ் கட்சியைப் பொறுத்தவரை என் எதிர்ப்பு இதுவரையில் நிரந்தரமாக இருந்திருக்கிறது. ஆனால் கட்சி எடுக்கும் முடிவுகளுக்குக் கட்டுப்பட்டுச் செயல்பட்டு வந்திருக்கிறேன். என்றைக்குமே இ. காங்கிரஸ் கட்சிக்குத் துணையாகப் போக மாட்டேன்.''

''உங்களுக்கு எதிராகக் கையெழுத்து இயக்கம் நடத்தினார்களாமே?''

''ஆமாம் பல எம். எல். ஏக்கள் நிர்ப்பந்தத்தினால்தான் கையெழுத்துப் போட்டிருக்கிறார்கள். இதை அவர்களே என்னிடத்தில் சொன்னார்கள். நான் என்ன குற்றம் செய்தேன் என்பது தான் புரியாமல் இருக்கிறது.

''என்னைத் தூய்மையாக வைத்துக்கொண்டது குற்றமா? கட்சிக்காக அல்லும் பகலும் பாடுபட்டது குற்றமா? கள் — சாராயத் தீமைகளை எடுத்துக் காட்டியது குற்றமா?''— இவ்வாறு எஸ். டி. எஸ். உருக்கமாகக் கேட்டது மனத்தை உலுக்கியது.

''ஜெயலலிதா கொ. ப. செ.. பதவியை ராஜினாமா செய்திருக்கிறாரே? இது உங்கள் வெற்றிதானே?''

''இது தவறான எண்ணம். ஜெயலலிதா என் எதிரி அல்ல. நான் சொல்வதெல்லாம் முதல்வர் கூறியது போல் 1972—ல் கட்சி எப்படி சுத்தமாக இருந்ததோ அதுப்போல் விளங்க வேண்டும் என்பதுதான். இவர் ராஜினாமாவுக்கும் என் கோரிக்கைகளுக்கும் சம்பந்தம் இல்லை.''

''எம். ஜி. ஆர். உங்களைப் பதவியிலிருந்து நீக்கி விட்டால்...?''

''ராஜினாமா கடிதத்தைக் கொடுத்துவிட்டேன். பதவி இருக்கிறதோ இல்லையோ; என் கடமையை நான் செய்து கொண்டு இருப்பேன். பதவியை எதிர்பார்த்துத் தானா அரசியலுக்கு வந்தேன்?''

பேட்டி முடிந்த போது 'இவரையா கட்சிக் கட்டுப்பாடு மீறிப் பேசுகிறார் என்று சொல்கிறார்கள்!' என்று வியப்பே மேலோங்கியது.

—ப்ரியன்

படங்கள்: ஜபா

---

''ரெண்டு நாளா உங்க ஹோட்டலில் நல்ல வியாபாரமா என்ன விஷயம்?''

''பக்கத்திலேயே ஒரு அரசியல் கட்சியினர் உண்ணாவிரதம் இருக்காங்களே!''

—இளை. அ. கதிர்வேல்.



## வாசகர் கருத்து



● திருமதி அனுராதா ரமணன் அவர்களின் ''சொல் ஒன்று வேண்டும்'' —கதை சிறந்த இலக்கியம். பரத்தாமன் விசுவரூபம் எடுத்து இந்த அமைதிப் போராட்டத்தின் தியாகச் சுடராக ஒளி வீசுகிறார்!
வேலூர்—12, காமாட்சி சத்தியநாராயணன்

● கதாபாத்திரங்களுக்கு உயிரூட்டி, பேசும் பொற் சித்திரமாய் வாசகர் கண்முன் நடமாட வைத்த ம. செ. யின் கைவண்ணத்துக்குச் சொல் ஒன்று வேண்டுமோ?
தருமபுரி, ரக்மா குருராஜன்.

● கடந்த 32 வாரங்களாக ஒவ்வொரு வியாழன் காலையிலும் கல்கியின் முகத்தில் விழிக்கும்படி ஆவலையும், அவசியத்தையும் ஏற்படுத்திய அனுராதா ரமணனின் தொடரையும், ம. செ. யின் ஓவியத்தையும் விமர்சிக்க வார்த்தைகள் இல்லை.
பம்பாய்—88, வை. கணேசன்.

● இன்ஸ்பெக்டர் பரந்தாமன் பாத்திரம் நெஞ்சை விட்டு அகலாதது. திரைப்படமாகத் தயாரிப்பதற்கேற்ற கதை.
புதுக்கோட்டை, ஜே. ராதா.

● ''சொல் ஒன்று வேண்டும்'' அ. ரமணனின் படைப்புக்களிலே மற்றுமோர் மைல் கல்லாக அமைந்து விட்டது.
பெங்களூர்—21, ஜி. சந்திரசேகர்.

● ஒவ்வொரு வாரமும் ''என்ன நடக்குமோ'' என்ற பீதியை எங்களிடையே ஏற்படுத்தி, கதையின் முடிவை யாராலும் அனுமானிக்க இயலாதவாறு மிகவும் உருக்கமாகக் கொண்டு சென்று, இறுதியில் சுபமாக முடித்து, எங்களை ஆனந்தக் கடலில் ஆழ்த்திய திருமதி அனுராதா ரமணனுக்கு எனது உளங்கனிந்த நன்றிகள்! பாராட்டுக்கள்!
காரைக்குடி—2, ச. பூங்கொடி.

# சொல் ஒன்று வேண்டும்




மக்கள் திலகம்
புரட்சித்தலைவர்
டாக்டர்
**எம்.ஜி.ஆர்**
பல வேடங்கள்
தாங்கி
நடிக்கும்
ஒரே நாடகம்!



# ஊழல் ஒழிப்பு







# கல்கி

1984 செப்டம்பர் 2
மலர் : 43 இதழ் : 5
ரக்தாக்ஷி ஆவணி 17



## ஜனநாயகப் படுகொலை!

**நா**டே நிலைமே சிரிக்கிறது! பாரத நாட்டுக்கே தீராத அவமானத்தைத் தேடித் தந்துவிட்டார்கள் ஜனநாயகத் துரோகிகள். காஷ்மீரத்தில் அரசியல் சூதாட்டம் நடத்திய இ. காங்கிரஸ், ஆந்திராவில் ஜனநாயகப் படுகொலைக்குக் கத்தியைத் நீட்டிக் கொடுத்திருக்கிறது. இருதய அறுவை சிகிச்சைக்காக என்.டி. ஆர். சென்றிருக்கும் போது சதி செய்து ரணங்கள் ஆறாத உடம்புடன் அவர் திரும்பி வந்ததும் வராததுமாகச் சதியை நிறைவேற்றியது முதுகில் குத்துவதை விடவும் கொடுமையானது. பாஸ்கரராவும், ராம்லாலும் இரட்டை வில்லன்களாகச் செயல்பட்டிருக்கின்றனர். இந்த அநியாயத்தை விடவும் பெரிய அக்கிரமம் ஒன்று உண்டெனில் அது 'ஆந்திரத் தலைநகரில் நடந்தவைகளுக்கும் தமக்கும் சம்பந்தமே கிடையாது' என்று பிரதமர் நாடகமாடுவதுதான். நடிகர்கள் அரசியலுக்கு வர முடியுமென்றால் அரசியல்வாதிகளும் நடிக்க முடியும் என்று பிரதமர் நிரூபிக்க விரும்புகிறார் போலும்!

என். டி. ஆருக்கு இழைக்கப்பட்ட அநீதி மக்களுக்குப் பெரிய அதிர்ச்சியை அளித்தது மட்டுமல்ல, ஆவேசமும் கொள்ளச் செய்து கலவரங்களுக்கு வித்திட்டது. யாராலும் தூண்டப் படாமல் இயல்பாக அவர்களே வெகுண்டு பொங்கி எழுந்தார்கள். ஏராளமானவர்கள் உயிர் பலியானார்கள். பலநாள் மௌனம் சாதித்த பிரதமர் மக்களின் எழுச்சி கண்டு மிரண்டு போய் ''நான் அப்பாவி'' வசனம் தயாரித்துக் கொண்டு நாடாளுமன்றம் வந்தார். ஆந்திராவில் மட்டுமின்றிப் பாரதம் முழுவதுமே மக்கள் இந்த ஜனநாயக விரோதச் செயல்களால் மனக்கசப்பு அடைந்துள்ளனர். தேர்தலில் (நடந்தால்) இதெல்லாம் தமக்குப் பாதகமாகிப் போகும் என்றுணர்ந்து இப்போது ''எனக்கு ஒன்றும் தெரியாது'' என்ற தலைப்பில் நாடகம் அரங்கேற்றுகிறார்.

சதிப் பாம்பின் சலசலப்பு கேட்டதுமே பிரதமர் ஹைதராபாத்துடன் தொடர்பு கொண்டிருக்கலாமே? பாஸ்கரராவை ஆதரிக்க முடிவு செய்த மாநில இ. காங்கிரஸ் தலைமைக்கும், என். டி. ஆருக்கு மூன்றுநாள் கூட பெரும்பான்மை நிரூபிக்க அவகாசம் தர மறுத்து பாஸ்கரராவுக்கு ஒரு மாதம் அவகாசம் தரச் சம்மதித்த ஆளுனருக்கும் புத்தி புகட்டியிருக்கலாமே? வாளாவிருந்துவிட்டு இப்போது ஆளுனர் மீது பழி சுமத்தித் தாம் தப்பிக்க முயல்வது சின்னத்தனம் மட்டுமல்ல யாராலும் நம்ப முடியாத வார்த்தைகளை நாடாளுமன்றத்தில் பிரதமர் பேசியதாகவும் ஆகிறது! இதே நேரத்தில் உள்துறை அமைச்சர் நாடாளுமன்றத்தில் ஆளுனரின் செயலை நியாயப்படுத்தவும் முயல்கிறார்! எதற்கு இந்த இரட்டை நாடகம்?

புதுடில்லி சென்ற எம். எல். ஏக்களுக்கு ரயில் ரிசர்வேஷனை ரத்து செய்தது, அந்த ரயிலும் என். டி. ஆர். பயணம் செய்த விமானமும் தாமதப்படுத்தப்பட்டது, ராமகிருஷ்ணா ஸ்டுடியோவில் நடந்த போலீஸ் சோதனை, என். டி. ஆரைக் கைது செய்து கொண்டு போனது எல்லாம் அற்பப் புத்தியை மட்டுமின்றி யதேச்சாதிகாரப் போக்கையும், அரசியல் சாசனத்தையே மதிக்காத ஆணவத்தையும் உணர்த்துவன.

இத்தனை அக்கிரமங்களிலிருந்தும் மூன்று நன்மைகளும் விளைந்துள்ளன. முதலாவதாக 'உயிரைக் கொடுத்தேனும் ஜனநாயகத்தைக் காப்பேன்' என்ற என். டி. ஆரின் வீரத்தைப் புரிந்து கொண்டோம். சக்கர நாற்காலியில் அமர்ந்து ராஷ்டிரபதி பவனுக்கு அவர் சென்றது நம் மனங்களை நெகிழ்வித்தது. அடுத்து எதிர்க்கட்சிகளிடையே முன்னிலும் அதிகமாக ஏற்பட்டுள்ள நேச மனப்பான்மை. மூன்றாவது, இ. காங்கிரஸிலும் தர்மத்துக்கு அஞ்சிய ஒருவரேனும் இருந்தார் என்பதை கமல்நாத் ஜாவின் ராஜினாமா எடுத்துக் காட்டியது. அந்த ஒருவரும் வெளியேறிவிட இ. காங்கிரஸ் அதர்மத்தின் மொத்த உருவாகக் காட்சி தருகிறது இன்று.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா , -பாரதியார்

# எஸ்.பி.முத்துராமன் பதில்கள்

கிரிக்கெட் மாட்சை நாள் முழுக்க, டெலிவிஷனில் பார்த்தாலும், மறுபடி 'ஹை லைட்ஸ்' பார்க்கும்போது ஒரு தனிச் சுவை. அதுபோலவே வாரா வாரம் விவித பாரதியில் 'கல்கி'யின் நேரம் நல்ல நேரம் நிகழ்ச்சியில் இயக்குனர் எஸ். பி. முத்து ராமன் அளித்த பதில்களைக் கேட்டிருந் தாலும் ஐந்து வார நிகழ்ச்சியின் தொகுப் பை படிக்கும்போது முன்னிலும் ரசமாகத் தான் இருக்கிறது. ஒலிபரப்பான எல்லா கேள்வி பதில்களும் இடவசதிஇன்மையால் இங்கு இடம் பெறாது போனாலும் பட்டுப் புடவைப் பரிசுக் குலுக்கலுக்கு எல்லாப் பெயர்களும் சேர்த்துக் கொள்ளப்பட்டன.

## சிம்பாலிக் காட்சி

தாங்கள் முதன் முதலில் டைரக்ட் செய்த படத்தில் மிக விரும்பி டைரக்ட் செய்த காட்சி எது? என்று கேட்ட தஞ்சாவூர் சாந்திக்கு எஸ். பி. எம்.மின் பதில்: ''படம் கனிமுத்துப் பாப்பா என்பது உங்களுக்கெல்லாம் தெரிந்திருக்கும். படத் தில் ஜெய்சங்கரும், முத்துராமனும் நண் பர்கள். நீண்ட இடைவெளிக்குப் பின், ஜெய், முத்துராமனைச் சந்திக்க வருகிறார். இந்த இடைவெளியில், முத்துராமனின் மனைவி இறந்து விட்டது தெரியாமல், ''உன் மனைவி எங்கே '' என்று கேட்கிறார். இதற்குப் பதிலை வசனம் மூலமோ, மாலை போட்ட படம் மூலமோ காட்டாமல், சிம்பாலிக்காகக் காட்ட நினைத்தோம். முத்துராமன், ஜெய்யை பூஜை அறைக்கு அழைத்துக் கொண்டு போய், சாமி படத் துக்குக் கீழே வைத்திருக்கிற தாலியை எடுத்துக் காட்டுவார். ஜெய் அதிர்ச்சி அடைவார். மனைவி இறந்ததைச் சொல் லாமல் சொல்கிற இந்தக் காட்சி எனக்குப் பிடித்தது: ரசிகர்களுக்கும் பிடித்தது.

## நிஜவாழ்க்கையில் பாட்டு இல்லையே!

நத்தம் ஆர். கே. ராஜா ''வாழ்வில் நடக் கும் எந்த நிகழ்ச்சிக்கும் மனிதன் பாட்டுப் பாடுவதில்லை. ஆனால் தற்கால சினிமாவில், மிக நேச்சுரலான படங்களில் கூட நாலைந்து பாடல் காட்சிகள் வருகின்றனவே?'' என்று கேட்டதற்கு முத்துராமன் சொன்னார்: ''படத்துக்கு பாடல் காட்சிகள் அவசியம்னு



நேரம் ரொம்ப நல்ல நேரம்










நினைக்கிறோம். பாடல் காட்சிகளுக்காகவே பல படங்கள் 'ஹிட்' ஆகி உள்ளன. வாழ்க்கையில் பாட்டுப் பாடுவதில்லை என்பதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். மீனவர்கள் கடலில், போகும் போது, கிராமத்தில் ஏற்றம் இறைக்கும்போது எல்லாம் பாடுவதில்லையா? மனித வாழ்க்கையில் பிறந்ததும் தாலாட்டில் தொடங்கி, இறந்ததும் ஒப்பாரி வரை பல கட்டங்களில் பாட்டு இல்லையா? டூயட் ஒரு இனிப்பு என்பார்கள். ஆனால் தியேட்டர்களில் படம் பார்க்கிற கணவன் — மனைவிகள் டூயட் காட்சியின் போது, தங்களை ஹீரோ, ஹீரோயினாகவே கற்பனை செய்து கொண்டு அவர்கள் போலவே தாங்களும் பாடி, ஆடி மகிழ்வதாய் நினைத்து ரசிக்கிறார்கள்; திருப்தியடைகிறார்கள். எனவே பாடல் இயற்கைக்குப் புறம்பானது இல்லை."

## பரதமும் கேபரேயும்!

"கேபரே டான்ஸர் பரத நாட்டியமும், பரத நாட்டியக் கலைஞர் கேபரேயும் ஆடினால் எப்படி இருக்குமோ அப்படித்தான்! காம்பினேஷன் சரிப்பட்டு வராது" — இந்த பதில் வந்தது, "விட்டலாச்சார்யா ஆர்ட் ஃபிலிமும், சத்தியஜித்ரே மசாலாப்படமும் எடுத்தால் எப்படி இருக்கும்?" என்ற **ஊஞ்சலூர் ஆர். நிர்மலாவின்** கேள்விக்கு.

## கமலும் ரஜினியும்!

எஸ். பி. எம். மை எப்படியும் வம்பில் மாட்டி வைத்துவிடுவது என்று மதுரை **நாகுவேலன்** தீர்மானித்து, "கமல், ரஜினி இரண்டு பேரையும் இயக்குவதில் ஏதாவது வித்தியாசம் இருக்கிறதா?" என்று கேட்டிருந்தார். ஆனால், டைரக்டர் பெரிய ஆள். பத்திரிகையாளர்கள், "எஸ். பி. எம். எதிலும் மாட்டிக்க மாட்டார். விலாங்கு மீன் போல நழுவி விடுவார்" என்று சொல்வார்கள். இந்தக் கேள்விக்கு அவர் நழுவிய விதம் சுவையானது: கமலின் பாணியும், ரஜினியின் பாணியும் வேறு வேறானவை. அவரவர் நடிக்கும் படங்களில், அவரவருக்கேற்ப, கமல் பாணியிலோ, ரஜினி பாணியிலோ காட்சிகளை அமைக்கிறோம். அவர்கள் அவற்றை அற்புதமாய்ச் செய்து விடுகிறார்கள். சுருக்கமாய்ச் சொல்ல வேண்டுமெனில் 'இன்றைய இளைய தலைமுறை நாயகர்களில் ரஜினியும், கமலும் நமக்குக் கிடைத்திருக்கிற இரு கண்கள்.

## கண்கலங்க வைத்த கிளைமாக்ஸ்

"நீங்கள் டைரக்ட் செய்த படம் ஏதேனும் ஒன்று உங்களையே கண்கலங்க வைத்தது உண்டா?" கேள்வி தொடுத்தவர் **ஜி. கே. விஜயன், சென்னை-4.** பதில்: எங்கேயோ கேட்ட குரலில் அம்பிகா, சலைவனைத் தொடத்தனக்கு அருகதை இல்லைன்னு நினைச்சு அவரோட (ரஜினி) நிழலைத்தொட்டு மன்னிப்பு கேட்கிற சீன் தொடங்கி, ஊரே ஒதுக்கி வைத்த தன் மனைவி உடலை, ரஜினி ஒருவராகவே தூக்கிக் கொண்டு போய், சிதை மூட்டுகிற வரையிலான காட்சியைப் பார்த்து விட்டு, தேம்பித் தேம்பி அழுத ரசிகர்களில் நானும் ஒருவன். அது எனக்குக் கிடைத்த வெற்றின்னு நினைக்கிறேன்.

## நிழல் நிஜமானது!

'உங்கள் படம் பார்த்து விட்டுத் திருந்திய சிலர் இருக்கக் கூடும். அவர்களைப் பற்றி ஏதாவது சுவையான சம்பவம் சொல்ல முடியுமா' என்று கேட்டவர் **வி. எஸ். அனந்தராமன்** என்கிற **காரைக்குடி** ரசிகர்.

இதற்கு எஸ். பி. முத்துராமன் சொன்ன பதில் இதோ:

சிலர் இல்லை; பலர். உதாரணமாய் ஒரு சம்பவத்தைச் சொல்கிறேன். ஒரு ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது படத்தில் சந்தர்ப்பச் சூழ்நிலையில் தான் காதலித்த கமலை விட்டு விட்டு, வேறு ஒருவரை, சுஜாதா கல்யாணம் செய்து கொள்கிறார். ஆனாலும் கமலை மறக்க முடியவில்லை. கணவனுக்குப் பணிவிடை செய்யும்போது, கமலின் நினைவுகள் அவரை வாட்ட, காதலனை, கணவனை என்று தடுமாறுகிறார். கமலுடன் பேசி, இருவரும் ஊரை விட்டு ஓடத் தீர்மானிக்கின்றனர். இரவு, கமல் சுஜாதா வீட்டுக்கு வர, சுஜாதாவும் கிளம்புகிறார். அப்போது, சுஜாதாவின் கணவன், வாழ்க்கை நெறி முறை, தம்பூர்

மரபு, ஒழுக்கம், பண்பாடு இதெல்லாம் பற்றி எடுத்துச் சொன்னதும், 'கணவனோடு வாழ்வதே சிறந்த வாழ்க்கை' என்று உணர்ந்து, வீட்டுக்குள்ளே போய்விடுவார். இந்தப் படம் வெளியானவுடன் எனக்கு ஒரு கடிதம் வந்தது. எனக்கும் சுஜாதா போலவே பிரச்சினை இருந்தது. காதலனா, கணவனா என்ற போராட்டத்தில், உங்கள் படம் பார்த்த பின் கணவன் தான் என்று முடிவு செய்து, இப்போது சந்தோஷமாய் இருக்கிறேன்!'' என்று அதில் எழுதியிருந்தது.

### கதையா? நடிப்பா? டைரக்ஷனா?

ஒரு படத்தின் வெற்றிக்குக் காரணம் நல்ல கதையா? சிறந்த நடிப்பா? உயர்ந்த டைரக்ஷனா? — கேட்டவர் **கடலூர் கன்னியப்பன்.** இந்தக் கேள்வி, சிறந்தது எது கல்வியா செல்வமா? வீரமா? என்பது போல இருக்கிறது. டைரக்டர் எஸ். பி. எம். முக்கு. ஆனாலும் இவர் முதல் முக்கியத்துவம் தருவதென்னவோ கதைக்குத் தான். ஏன்? ''நல்ல கதை இல்லாத படம் அஸ்திவாரமில்லாத கட்டிடம் போல. நல்ல கதை இருந்தால் தான் சிறந்த கதாபாத்திரங்கள் அமையும். புதுமையான குணசித்திரங்களுடன் கதாபாத்திரங்கள் அமைந்தால் தான் சிறப்பாக டைரக்ட் செய்து நடிகர்களின் ஆற்றலைப் பிரகாசிக்கச் செய்ய முடியும்.''

### சிவாஜியை மிஞ்ச...

**வெலிங்டன்** ரசிகர் **மோகன்** உங்கள் டைரக்ஷனில் குறிப்பிட்ட கஷ்டமான காட்சியை உங்கள் எதிர்பார்ப்புக்கும் அதிகமாய், ஒரே டேக்கில் அழகாய் நடித்தவர் யார்? என்று கேட்டிருந்தார்!

''சிவாஜியோட 'கவரிமான்' பட டைரக்டர் நான்தான். கதைப்படி நாகரீகமோகம் கொண்ட பிரமீளா, சிவாஜியின் மனைவி. தன் மனைவி வேறு ஒருத்தனுடன் படுக்கையில் இருப்பதைத் திடீரென வீடு திரும்புகிற சிவாஜி பார்க்க நேர்டுகிறாற் போல ஒரு காட்சி. காட்சியை சிவாஜியிடம் விளக்கியதும், சிவாஜி ஷாட்டுக்கு ரெடியானார். நான் ஸ்டார்ட் சொன்னேன். அதிர்ச்சி, ஆத்திரம், கண்கள் சிவக்க, நரம்புகள் புடைக்க, முகத்தில் கோபத்தீ கொழுந்து விட, உணர்ச்சிகளைக் கொட்டிவிட்டார். செட்டில் அத்தனை பேரும் பிரமித்து நின்று கொண்டிருக்க, நடித்து முடித்துவிட்டு 'என்னப்பா! கட் சொல்லலியா'. என்று கேட்ட பிறகு தான் நாங்கள் எல்லோரும் சுய நினைவுக்கு வந்தோம்!

---

ஒருத்தி: ''மகா கருமிங்கிறியே உன் கணவரை, ஏன்?''

மற்றவள்: ''பின்னே? எந்தப் பொருளையும் ஒண்ணுக்குப் பத்து தரம் யோசிச்சுத்தான் வாங்காம இருப்பாரு!''

—லட்சுமி மோகன்.



### சினிமாவும், அரசியலும்

கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும் போது, அரசியலிலும், சினிமாவிலும் சேரத் துடிக்கும் இளைஞர்களுக்கு அறிவுரை என்ன சொல்வீர்கள் என்று **ஈரோடு வேங்கடசாமி** கேட்க, அதற்குப் பதில்: 'படிப்பு முடியற வரை அரசியல் பார்வையாளராகவே இருங்கள்' என்ற அண்ணாவின் அறிவுரையையே நான் சொல்ல விரும்புகிறேன். இது சினிமாவுக்கும் பொருந்தும். படிப்பை முடித்ததும், தாராளமாய், வரலாம். ஆனால் சினிமாவில் நிரந்தர பணம், நிரந்தர புகழ், நிரந்தர இடம் எல்லாம் இடைக்குமெனச் சொல்லி விட முடியாது. எந்தப் பிரச்சினை யானாலும் துணிந்து, எதிர் நீச்சல் போடுகிற தன்னம்பிக்கை இருக்கிறவர்கள் மட்டும் வாருங்கள். ஆனால் பல இளைஞர்கள் பணத்தையும், நேரத்தையும் இங்கே வீணடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதென்னவோ நிஜம்.

### பாக்யராஜுக்கும் பாக்யராஜுக்கும் போட்டி

தமிழ்த் திரையுலகில் வெகு விரைவில், மிகவும் முன்னேறியவர் என்று யாரைக் கருதுகிறீர்கள்? **(சுரேஷ், திருச்சி)**

பாக்யராஜ்தான். கிழக்கே போகும் ரயில் படம் நேற்றுப் பார்த்தாற் போல இருக்கு. அதில், ஒரு சின்ன, உடம்பில் சட்டை இல்லாத ஒரு கிராமத்து இளைஞர், ஏரி உடைஞ்சு ஊருக்குள்ள வெள்ளம் வரப் போகுதுன்னு அபாய அறிவிப்பு தருகிற போது, இந்த இளைஞர் இன்னும் சில வருடங்களில், ரொம்ப பிரபலமானவராய் விளங்கப் போறார்னு யாரும் கனவிலும் நினைக்கலே. பாரதிராஜா, பாக்யராஜைப் புதியவார்ப்புகளில் ஹீரோவா அறிமுகப் படுத்தினது அவர் வாழ்க்கையில் ஒரு திருப்புமுனை. புதிய வார்ப்புகள் பாக்யராஜ் என்கிற நல்ல நடிகரைத் தந்தது; கன்னிப் பருவத்திலே, பாக்யராஜ் என்கிற நல்ல வசன கர்த்தாவைத் தந்தது; சுவர் இல்லாத சித்திரங்கள், பாக்யராஜ் என்கிற நல்ல டைரக்டரைத் தந்தது.. இந்த மூணு பாக்யராஜ் களும் சேர்ந்து மௌனகீதங்கள், அந்த 7 நாட்கள், தூறல் நின்னுப் போச்சு, டார்லிங், டார்லிங், டார்லிங், முந்தானை முடிச்சு என்று வரிசையாய் வெற்றிப்படங்களைத் தந்துகிட்டிருக்காங்க. பொதுவாக, ஒருத்தருக்கும், இன்னொருத்தருக்கும்போட்டி

---

இருக்கும். ஆனால், இங்கே ஒரு பாக்ய ராஜுக்கும், இன்னொரு பாக்யராஜுக்கும் போட்டி. இதனால்தான் இதுவரை எந்தப் படமும் எட்டிப் பிடிக்காத அளவுக்கு அவர் படங்கள் விற்கின்றன; முதல்வர் எம்.ஜி. ஆர். 'தன் கலையுலக வாரிசு' என்று சொல்கிற அளவுக்கு அவர் உயர்ந்திருக்கிறார்.

**பாட்டெழுதுவது சிரமமா?**

**வி. பிரசாத், சென்னை-1,** *சினிமாவுக்குப் பாட்டெழுதுவது கஷ்டமா? நிறைய புதுப் பாடலாசிரியர்கள் அறிமுகமாவதில்லையே?*

சினிமாவுக்குப் பாட்டெழுதுபவர்கள், குறிப்பிட்ட காட்சியின் சூழ்நிலை, கதா பாத்திரங்களின் குணாதிசயங்கள் இவற்றை எல்லாம் தெளிவாய்ப் புரிஞ்சுக்கிட்டு ஏற்கெனவே கம்போஸ் செய்யப்பட்ட இசைக்கேற்ப பாட்டு எழுத வேண்டும். இது ஓட்டப் பந்தயத்துல வேகமாயும் ஓடணும், அதே சமயம் டிராக்லயும் ஓடணும் என்கிறமாதிரி. இன்றைக்கு இருக்கிற அவசரமான சூழ்நிலையில், கவிஞர்களை உட்கார வைத்து, சூழ்நிலையை விளக்கி, ஏழெட்டு விதமா எழுதி வாங்கி, ஒன்றை செலக்ட் செய்ய நேரம் கிடையாது. அதனாலதான் பழையவர்களையே அணுகுகிறார்கள். சந்தர்ப்பமும் அவகாசமும் கிடைக்கும் போது புதியவர்களுக்கு நிச்சயம் வாய்ப்புத் தருவோம்.

**கிசுகிசு—பிசுபிசு**

*சினிமா உலகத்தினரைப் பற்றி நிறைய கிசுகிசுக்கள் வருவது ஏன்?* **எஸ். மோகன் மயிலாடுதுறை.**

சினிமாக்காரர்களைப் பற்றி அதிக கிசுகிசுக்களை ரசிகர்கள் எதிர்பார்ப்பதால்தான் பத்திரிகைகள் தருகின்றன. சினிமாத் துறையில் ஆண்களும், பெண்களும் நெருங்கிப் பழக வாய்ப்புக்கள் அதிகம். ஆனால் அவர்களிடமும் கட்டுப்பாடு உண்டு. பணத்தில் புழங்கும் பாங்க் கேஷியர், அந்தப் பணத்தை எடுத்துத் தாராளமாகச் செலவழிக்க முடியுமா? எல்லா இடங்களிலும் போல் இங்கும்

சில குறைபாடுகள் உண்டு: இவை பூதக் கண்ணாடி கொண்டு பெரிது படுத்தப்படு வின்றன. ரசிகர்கள் முக்கியத்துவம் தராவிட்டால், கிசுகிசுக்கள் பிசுபிசுத்துப் போய் விடும்.

## மீள முடியாத அதிர்ச்சி!

**அசோக், விருகம்பாக்கம்:** சமீபத்தில் தங்களை அதிர்ச்சியடையச் செய்த சம்பவம் ஏதாவது உண்டா?

எஸ்.பி.எம். குரல் தழுதழுக்கச் சொன்ன சம்பவம், அனைத்து ரசிகர்களிடமும் கண்ணீர் துளிர்க்கச் செய்து விட்டது. அவர் விவரித்தது அண்மையில் மறைந்த ஸ்டண்ட் மாஸ்டர் ரவி பற்றி. நான் 'சுமங்' படம் ஒன்றை இயக்கிக் கொண்டிருந்தேன் ஷெட்டில். அப்போது தான் ஸ்டண்ட் மாஸ்டர் ரவி அடிபட்டு, ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருக்கிறார் என்கிற அதிர்ச்சியான நியூஸ் கிடைத்தது. சண்டைக்காட்சிகளில் ரிஸ்க் எடுத்து, ரொம்பத் துணிச்சலாய் ஈடுபடுகிற ரவி, எங்கள் படங்கள் பலவற்றில் ஒத்துழைத்திருக்கிறார். முரட்டுக்காளையில் ஓடும் ரயிலில் இருந்து பாய்வது, போக்கிரி ராஜாவில் பாறையிலிருந்து உருளுவது, சகலகலா வல்லவனில் நெருப்பில் பாய்ந்து வருகிற காட்சி, என்று பல காட்சிகளை எல்லோரும் பிரமிக்கிறாற் போல் செய்தவர். எந்த கஷ்டமான காரியமானாலும் ஓ.கே. சார்! என்று சொல்லிவிட்டு, வேலையில் இறங்கி விடுவார். வாழ வேண்டிய வயது. கல்யாணமாகி இரண்டு வருஷமே ஆகிறது: ஆஸ்பத்திரியில அவரைச் சந்தித்து ஆறுதல் சொன்ன போது, வழக்கமாச் சொல்கிற மாதிரியே பதில் சொன்னார், "ஓ.கே.சார்!" என்று. பல சாகசங்கள் செய்த ரவி, சாதாரணமான கரணம் போடும்போது தவறி விழுந்து, அதனால உயிர் விட்டது பாம்பு கடிச்சு சாகாதவன், எறும்பு கடிச்சுச் செத்தது போலத்தான் இருக்கு. கடமையாற்றும் போதே கிடைச்ச அவரோட மரணம் ஒரு வீரமரணம்.

## இசைச்சித்தர் இளையராஜா!

சாஸ்திரிய சங்கீதத்தைப் பிரதானமாய் வைத்துப் படம் எடுத்து, இளைஞர்களிடையே கர்நாடக இசையார்வத்தை வளர்க்க முன் வருவீர்களா? —**ஜெயஸ்ரீ ராஜகோபாலன், பம்பாய்.**

கவரிமான் படத்துல ஷொஜி கர்நாடக இசைக் கச்சேரிக் காட்சியைப் பார்த்த பலர் கர்நாடக இசையை முக்கியமாய் வைத்துப் படம் எடுங்கள் என்று கடிதம் எழுதினார்கள். நானும் அதற்குச் சில ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்த சமயம் சங்கராபரணம் வெளி வந்தது. சங்கராபரணம் சாஸ்திரிய சங்கீதத்துக்கு ஒரு முத்திரை. அதைவிடச் சிறப்பாய் என்னால் செய்ய முடியுமான்னு எனக்குள்ளே கேள்வி எழுந்தது. ஆனாலும், நிச்சயம் கர்நாடக இசைக்கு முக்கியத்துவம் தந்து, இளையராஜா என்கிற இசைச் சித்தர் மூலம் சித்து வேலை செய்ய ஆசை இருக்கிறது. நேரமும், சூழ்நிலையும் வரும் போது நிச்சயம் அப்படி ஒரு படம் எடுப்பேன்!

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**
மேலட்டையில்: **எஸ். பி. முத்துராமன்**
வண்ணப்படம்: B. R. பிரதர்ஸ் கலர் லேப்

ராகமாலிகா வழங்கும் பட்டுப் புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:

**எஸ். மோகனன்**
31, கோவில் வீதி,
வெலிங்டன் பஜார், நீலகிரி-643232

# வருடிய மலர்

5

அன்று காலையில் வானம் துல்லியமாக இல்லை. சற்றே மேக மூட்டமாக இருந்தது. மழை வரும் என்று தோன்றிற்று. காற்று சிலுசிலுவென்று உடம்பை வருடிக்கொண்டு போயிற்று. அதில் குளிர்ச்சாதனம்பொருத்தப் பட்ட நவீன பஸ் ஒன்றில் நீண்ட தூரம் பிரயாணம் செய்வது இனிமையான அனுபவமாகத் தோன்றியது. கிருத்திகாவைப் போன்ற புத்திசாலித்தனமான பெண்ணுடன் சம்பாஷித்துக் கொண்டே சென்றது இன்னமும் ஒரு இதமான நெஞ்சில் நிறைகிற முக்கிய சம்பவமாகப் பட, அர்ஜுன் அவளைத் திரும்பிப் பார்த்தான்.

''என்ன பார்க்கிறீர்கள்?''

கிருத்திகா புன்னகையோடு கேட்க, அவன் மென்மை மாறாத குரலில் சொன்னான்.

''இந்தப் பிரயாணம் முடிவடையாமல் இப்படியே போய்க் கொண்டிருக்காதா என்று தோன்றுகிறது...''

அதைக் கேட்டுப் பதில் எதுவும் சொல்லாமல் மெலிதாகச் சிரித்தாள் அவள்.

''என்ன சிரிக்கிறீர்கள்...?''

''இல்லை, உங்கள் நினைப்பை யோசித்தேன். சிரிப்பு வந்தது...''

''இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது கிருத்திகா...?''

''இந்த உலகத்தில் எல்லாவற்றிற்கும் முடிவு என்று ஒன்று உண்டே அர்ஜுன்...''

''பிரயாணம் என்றால் நீங்கள் பஸ்ஸில் போகிற இந்தப் பயணத்தைக் குறிப்பிடுகிறீர்கள் என்று நினைக்கிறேன்...''

---

● ஓர் ஆண்டிற்குள் ஒரு சிறந்த நண்பனைப் பெற முடியாது: ஒரு மணி நேரத்தில் ஒரு சிறந்த நண்பனை இழந்து விட முடியும்.

சீனப்பழமொழி.
—ஜா.ரவி.



''இல்லை, நீங்கள் சொல்வது வெறும் பஸ்ஸையும், போகிற வழியையும், பார்க்கப் போகிற, அல்லது பார்த்த இடங்களையுமில்லை என்பதைத் தெரிந்து கொண்டேன்.''

''தட்ஸ் ரைட். ஆனால் வேறு எதைக் குறிப்பிட்டேன் என்று சொல்ல முடியுமா கிருத்திகா...?''

''இந்தப் பிரயாணத்தின் மூலம் ஏற்படுகிற அனுபவத்தைக் குறிப்பிடுகிறீர்கள் இல்லையா...?''

''அனுபவம் என்று எதைச் சொல்கிறேன் தெரியுமா...?'' அர்ஜுன் லேசான குறும்புப் பார்வையும், புன்னகையுமாகக் கேட்ட போது அவள் அந்தப் பார்வையை நேராகச் சந்திக்கிற சக்தியற்றுத் தலையைக் குனிந்து மெலிதான குரலில் சொன்னாள்:

''நீங்களே சொல்லி விடுங்களேன், ப்ளீஸ்...?''

''ஏன், உங்களால் சொல்ல முடியவில்லையா?''

''ம்ஹூம்...''

''சரி, என் அனுபவத்தைச் சொல்ல முடியாவிட்டால் உங்களின் அனுபவம் என்ன என்பதையாவது சொல்லுங்களேன் ப்ளீஸ்...''

''என் அனுபவம்... என் அனுபவம்... வந்து... நத்திங் பர்டிகுலர்...''

''பொய்'' என்று சிரித்தான் அவன். ''எல்லாவற்றையும் வெளிப்படையாகப் பேசுகிற நீங்கள் இதில் மட்டும் பொய் சொல்கிறீர்கள்...''

''சரி, நான் பேசுவது தான் பொய் என்று தெரிகிறதே. உண்மை என்ன என்று தான் சொல்லுங்களேன்...''

''என் மனத்தின் உண்மையைத் தான் என்னால் சொல்ல முடியும். உங்களுடையதை நீங்கள் தான் சொல்ல வேண்டும்...''

''உங்களுடையதைச் சொல்லுங்கள். பின் நான் என்னுடையதைச் சொல்கிறேன்..''

''ஏன், நீங்கள் முதலில் சொல்லக் கூடாதா...?''

''நீங்கள்தானே ஆரம்பித்தீர்கள். அதனால் நீங்களேதான் சொல்ல வேண்டும்...''

அவன் பதில் சொல்லாமல் ஒரு விநாடி அவளையே பார்த்தான். நெருப்புக்கொன்றை பூ மாதிரி சிவப்பு நிற சல்வார் கம்மீஸில் தகதகவென்றிருந்தாள். நெற்றியும், கன்னங்களும், இயற்கையான வெளிர் மஞ்சளில் பளபளத்தன. நீளநீளமான இமைகள் கண்களுக்கு அசாதாரண ஆகர்ஷண சக்தியைக் கொடுத்தன. தலையை ஒற்றைப்பின்னலாகப் பின்னி, வலது காதின் பின் பக்கமாகச் சிவப்பு ரோஜா ஒன்றை இலையுடன்

செருகியிருந்தாள். காதில், கழுத்தில், கைகளில் ஒரு நகையில்லை. துடைத்து மெருகேற்றின குத்து விளக்கு மாதிரி இருந்தாள். அவளிடம் அர்ஜுனுக்கு மிகவும் பிடித்த, அதிகம் கவர்ந்த விஷயங்கள் இந்த எளிமையும், இயற்கையான, மென்மையான அழகும்தான். டெல்லிப் பெண்களைப் போல் வலியத் தன்னை அவள் அழகு படுத்திக் கொண்டிருக்கவில்லை. உதட்டிலும், கன்னங்களிலும் வெப்பு தீட்டிக் கொண்டிருக்கவில்லை. கண்களில் மையில்லை. நெற்றியில் புருவ மத்தியில் சின்னக் கறுப்புச்சாந்து பொட்டும் அதற்கு மேல் லேசான கீறலாக விபூதியும் தான். தென்னிந்தியர்களின்வழக்கமான பாணி உடையான புடவையை மட்டும் தவிர்த்து எப்போதும் சல்வார் கம்மீஸில் காணப்பட்டதைத் தவிர வேறு செயற்கை சாதனங்கள் இல்லை. அதைக் கூட அவன் ஒரு முறை கேட்டு விட்டான்.



''நீங்கள் ஏன் உங்கள் தென்னிந்திய பாணியில் புடவை கட்டாமல், இப்படிச் சல்வார் கம்மீஸ் அணிகிறீர்கள் இருந்திரா?''

''இது வசதியாக இருக்கிறது என்பதால் அணிகிறேனே தவிர வேறு எதற்கும் இல்லை...''

அதைக் கூட அழகிற்காகவோ, கவர்ச்சிக்காகவோ அணியவில்லை என்பது அவன் மனதைத் தொட்டது. அவள் அவளாக இருப்பதும் அவனுக்கு அவளிடம் அதிக ஈடுபாட்டை ஏற்படுத்தியிருந்தது.

அப்போதும் அவன் அதே எண்ணத்தில் அவளைப் பார்க்க, அவள் தலையைக் கவிழ்ந்து மெதுவாகக் கேட்டாள்.

''என்ன, அப்படிப் பார்க்கிறீர்கள் அர்ஜுன்...?''



''இல்லை, இந்த எளிமையிலும் நீங்கள் எவ்வளவு அழகாக இருக்கிறீர்கள் என்று பார்க்கிறேன்...''

''ஓ... போதும் அர்ஜுன்...''

''நிஜமாகத்தான் சொல்கிறேன் கிருத்திகா...''

''நான் ஏதோ நிஜத்தைக் கேட்டால் நீங்கள் இந்த நிஜத்தைச் சொல்கிறீர்களே...''

''இதுவும் நிஜம்தானே...?''

''இந்த நிஜம் போதும். சொல்ல வந்த நிஜத்தைச் சொல்லுங்களேன் ப்ளீஸ்...?''

''சொல்கிறேன். நாம் இப்போது ஆக்ராவிற்குள் நுழைகிறோம். முதலில் இதைப் பாருங்கள்...''

கிருத்திகா பஸ் ஜன்னல் வழியாக வெளியில் பார்த்து ஏமாந்து போனாள். மணல் வீதிகளும், புழுதியும், சின்னச்சின்ன பெட்டிக் கடைகளும், அழுக்கு உடையில் நடமாடிக் கொண்டிருந்த மனிதர்களும், பழைய காரை பெயர்ந்த வீடுகளும்... இதுவா ஆக்ரா...? சடாரென்று திரும்பி அர்ஜுனைப் பார்த்துக் கேட்டாள்.

''என்ன அர்ஜுன் இது...? இதுவா ஆக்ரா...? ஏதோ எங்கள் தஞ்சாவூர் ஜில்லாவின் குக்கிராமம் ஒன்றில் நுழைந்த மாதிரி இருக்கிறதே...? புது டில்லிக்கும் இதற்கும் எவ்வளவு வித்தியாசம்...?''

''இப்படிப்பட்ட சில வித்தியாசங்கள் தவிர்க்க முடியாதவை கிருத்திகா. ஆரம்ப கால நகர நிர்மாணத்தைப் பொறுத்தவை...''

''நோ, நோ. இதைக் கவனிக்காமல் தவற விட்டு விட்டதாகத் தான் எனக்குப் படுகிறது. இத்தனைக்கும் இது ஆயிரக்கணக்கான உல்லாசப் பயணிகள் வருகிற இடம். உலக அதிசயங்களில் ஒன்றான தாஜ்மகால் இருக்கிற நகரம். இதையா இப்படி வைத்திருப்பது...?''

''எனக்கென்னவோ இது இப்படி இருப்பதுதான் அழகாகத் தெரிகிறது. மண் வாசனை மாறாமல், இயற்கையாக இருக்கிறது. ஆனாலும் உங்கள் ஆதங்கத்தை எழுதி எந்தப் பத்திரிகைக்காவது அனுப்புங்கள்.''

''செய்யத்தான் போகிறேன்'' என்று கீழே இறங்கிய கிருத்திகா பக்கத்தில் தெரிந்த அரையிருட்டுரெஸ்டாரெண்ட்டைப் பார்த்து விட்டுக் கேட்டாள்.

''இங்கு எதற்காக வந்திருக்கிறோம்...?''

''இது என்ன கேள்வி? சாப்பிட...''

''நோ. இது வேண்டாம். இது போன்ற இடங்களைப் பார்த்தாலே எனக்கு அலுப்பாக இருக்கிறது. வேறு ஏதாவது இடத்தில் சாப்பிடலாமா அர்ஜுன்...?''

''உங்களுக்கு ஆட்சேபனை இல்லாத பட்சத்தில் அருகில் ஒரு சின்ன இடமிருக்கிறது. அங்கே சூடாக சப்பாத்தியும், சப்ஜியும் செய்து தருவார்கள். போகலாமா...?''

''ஓ, எஸ். போகலாம் வாருங்கள்...''

கூரை வேய்ந்த சின்ன அறையின் பெஞ்சில் உட்கார்ந்து சூடாய் அலுமினியத் தட்டில் விழுகிற சப்பாத்தியையும், காலிஃப்ளவர், பட்டாணி கலந்த சப்ஜியையும் ருசித்துச் சாப்பிடுகிற அவள் நிஜமாகவே வித்தியாசமான பெண்ணாகத் தெரிய அர்ஜுன் அதிகமாக நேசிக்கத் துவங்கினான். தன்னையும், தன் உணர்வுகளையும் பிரதிபலிக்கிற இவளுடன் வாழ்க்கை இணையுமானால் அற்புதமானதாக இருக்கும்!

''ஸாரி... இங்கே காபி கிடைக்காது...''

''இப்போதெல்லாம் டீயே பழக்கமாகி விட்டது அர்ஜுன்...''

—குழந்தையாகச் சிரிக்கிற அந்த முகத்தை அருகில் இழுத்து முத்தமிடத் துடித்த எண்ணத்தை அடக்கிக் கொண்டு டீ குடித்து முடித்து எழுந்து பஸ்ஸை நோக்கி நடந்த போது கிருத்திகா கேட்டாள்.

''இப்போ எங்கே போகிறோம்...?''

''தாஜ்மகாலுக்கு...''

''அப்பா! இந்த தாஜ்மகாலைப் பார்க்க வேண்டுமென்பது என் எத்தனை நாளைய ஆசை தெரியுமா? சின்ன வயசில் கல்கியின் அலையோசை படித்த போது, அதில் அந்த சூர்யாவும், சீதாவும், தாரிணியும் பௌர்ணமி ராத்திரி ஒன்றில் தாஜ்மகாலைக்கண்டு பேச்சிழந்து நிற்கிற காட்சியைப் படித்ததிலிருந்து தாஜ்மகாலைப் பார்க்க வேண்டுமென்ற ஆசை எனக்குள் ஏற்பட்டது...'' பஸ்ஸில் ஏறி உட்கார்ந்து கல்கியைப் பற்றி விளக்கிச் சொன்னாள். அவர் எழுதிய பொன்னியின் செல்வன், சிவகாமியின் சபதம் ஒன்று விடவில்லை. 'அவரைப்போல் எல்லாவிதத் துறையிலும் தகுதி பெற்ற ஒரு எழுத்தாளர் மேல்நாடுகளில் கூட இருக்க மாட்டார்கள்...'' என்றாள்.

ஆர்வமாகக் கேட்டுக் கொண்ட அர்ஜுன் திடீரென்று ''எனக்குத் தமிழ் பேச, படிக்கக் கற்றுக் கொடுங்களேன், கிருத்திகா?'' என்று கேட்டான்.

---

''போய்ப் பாட்டு எழுது, உங்க அப்பாவைப் போல'' — என்று சினிமாவில் நடிக்க 'சான்ஸ்' கேட்டு வந்த ஒருவருக்கு தாரா சந்த் பர்ஜாத்யா என்ற தயாரிப்பாளர் அறிவுரை கூறி அனுப்பினார்.

சான்ஸ் கேட்டு வந்தவர், 'பாட்டு' எழுதப் போகவில்லை. சினிமாவில் நடிக்க ஆரம்பித்து, தாராசந்த் பர்ஜாத்யாவையே தம்மிடம் கால்ஷீட் கேட்டு வாங்க வைத்து விட்டார்!

அந்த நடிகர்,
அமிதாப் பச்சன்!

—சேலம் சக்தி.



"நீங்கள் எனக்கு இந்தி கற்றுத் தருவீர்களா...?"

"வித் ப்ளெஷர்..."

கால் விநாடி யோசனைக்குப் பின்னர் கிருத்திகா சொன்னாள்.

"நல்ல காலமாய் அம்மா படிக்க என்னை இங்கே அனுப்பினாள். அதனால் தான் உங்களுடைய சினேகிதம், புது இடத்தைப் பார்க்கிற வாய்ப்பு எல்லாம் கிடைத்தது."

அவன் பதில் சொல்லாமல் சிரிக்க தாஜ்மகாலுக்கு வெகு தூரத்திற்கு முன்னரே பஸ் நிறுத்தப்பட்டு அனைவரும் இறங்கி நடக்க, அர்ஜுன் கிருத்திகாவைக் குறுக்கு வழியாகச் சின்ன மலை மாதிரி இருந்த குன்றில் ஏற்றி அழைத்துக் கொண்டு போனான். தாஜ்மகால் நுழைவு வாசலில் டிக்கெட் வாங்கி உள்ளே போனதும் அங்கு வருபவர்களைப் புகைப் படமெடுப்பதை தொழிலாகக் கொண்டிருந்த சிலர், அவர்களைச் சூழ்ந்து ஒரு புகைப்படம் எடுத்துக் கொள்ளச் சொல்லி கெஞ்ச அர்ஜுன் கிருத்திகாவைப் பார்த்தான்.

"உங்களுக்கு ஆட்சேபணை இல்லையென்றால் ஒரு புகைப்படம் எடுத்துக் கொள்ளலாமா...?"

தாஜ்மகாலைப் பின்னணியாக்கி முன்னால் இருந்த புல் தரையின் சிமெண்டுப் பெஞ்சில் உட்கார்ந்து அவளுடன் புகைப்படம் எடுத்துக் கொண்டு அர்ஜுன் பணமும், தன் விலாசமும் தந்து தவறாமல் மூன்று காப்பிகள் அனுப்பச் சொல்லி விட்டு தாஜ்மகாலைப் பார்க்க நகர்ந்தான்.

தாஜ்மகாலை அந்த லேசான வெய்யிலில் பார்த்த கிருத்திகா அளவற்ற ஏமாற்றமடைந்தாள். தான் படித்த தாஜ்மகாலுக்கும், நேரே பார்ப்பதற்கும் நிறைய வித்தியாசமிருப்பதை உணர்ந்தாள். அந்தப் பளிங்குக் கட்டிடம் அவளுக்குள் எந்தவிதமான சலனத்தையும் ஏற்படுத்தாததால் அர்ஜுனிடம் ரகசியமாகச் சொன்னாள்.

"இதில் என்ன இருக்கிறதென்று இப்படிப் புகழ்கிறீர்கள்...?"

அர்ஜுன் அவளை ஆச்சரியமாகப் பார்த்தான்.

"சற்று முன்புதான் உங்கள் தமிழ் எழுத்தாளர் அற்புதமாக எழுதியிருந்தார். அதைப் படித்ததிலிருந்து தாஜ்மகாலைப் பார்க்க வேண்டுமென்கிற ஆசை ஏற்பட்டது என்றீர்கள். இப்போது இப்படிச் சொல்கிறீர்களே...?"

"எழுத்தாளர்கள் எதையும் தங்களின் அழகுணர்ச்சியோடு பார்க்க மட்டுமின்றி, எழுதவும் தெரிந்தவர்கள் என்பது இப்போதுதான் தெரிகிறது..."

"இங்கே எது உங்களை இவ்வளவு தூரம் ஏமாற்றியிருக்கிறதென்று தெரிந்து கொள்ளலாமா...?"

"எல்லாமேதான். எங்கள் கருங்கற் கோவில்களில் இல்லாத எந்தச் சிற்ப அழகை இங்கே பார்க்க முடிகிறது...?"

"கருங்கல்லில் சிற்பம் செதுக்குவது வேறு, இது வேறு கிருத்திகா. பளிங்குக்கல் வேலைப்பாடுகள் கருங்கல் சிற்பத்தை விடக் கடினமானவை. எளிதில் உடையக் கூடியவை. அதுவுமில்லாமல் இந்தப் பூவேலைப் பாடுகளில் பதிக்கப்பட்டிருப்பவை விலை உயர்ந்த கற்கள் கிருத்திகா... டார்ச் அடித்து ஒவ்வொன்றாகப் பார்த்தால் தான் அவற்றின் அழகுகள் தெரியும்..."



**கலைஞர்களின் கர்வம்**

கலைஞர்களின் ஆபரணமான கர்வத்தை அங்கீகரித்து விடுங்கள். ஏனென்றால் கலைஞர்களின் கர்வம் ஆணவமன்று அது அடர்த்தியான தன்னம்பிக்கை. இழுத்துக் கட்டப் பட்ட வீணையின் தந்திதான் சுண்டினால் சுரம் கொடுக்கும்.

ஆதாரம்: கவிஞர் வைரமுத்து எழுதிய 'மௌனத்தின் சப்தங்கள்'

தகவல்: டி. எ. கிருஷ்ணமூர்த்தி.

"இருக்கலாம். ஆனாலும் நான் ஏமாந்து போனது நிஜம். இந்தத் தாஜ்மகால் என் மனத்தைத் தொடவில்லை..."

"ஆனால் என் மனத்தைத் தொட்டிருக்கிறது. இதற்கு முன் பார்த்த அத்தனை முறைகளைவிட இந்த முறை மிக ஆழமாகத் தொட்டிருக்கிறது..."

"எப்படி...?"

"காதலுக்காக இப்படிப்பட்ட ஒரு சின்னத்தை எழுப்ப வேண்டுமென்று தோன்றியதே... அந்த ஷாஜகானின் காதல் எத்தனை ஆழமானது கிருத்திகா...? எவ்வளவு உயர்ந்தது...?"

"காதல் அவ்வளவு உயர்ந்ததா...?"

"மதுரையிலிருந்து டில்லி வர தமிழ்நாடு எக்ஸ்பிரஸில் ஏறுவதற்கு முன்பு கேட்டிருந்தால் என்ன பதில் சொல்லியிருப்பேனோ தெரியாது. இப்போது — நிச்சயமாக எஸ். என்றால் முடியுமானால் உங்களுக்காக— ஐயம் ஸாரி, உனக்காக இப்படி ஒரு சின்னத்தைக் கட்ட நான் தயங்க மாட்டேன் கிருத்திகா..."

"அர்ஜுன்..." — கிருத்திகா அதை எதிர்பார்த்தவளாகவும், அந்த வார்த்தைக்காகச் சந்தோஷப்பட்டவளாகவும், பேச வராமல் தவித்தவளாகவும் அவன் முகத்தை நிமிர்ந்து பார்க்க —

அவளின் மிருதுவான வலது கையைப் பற்றி மென்மையாய் முத்தமிட்ட அர்ஜுன்,

"ஐ லவ் யூ கிருத்திகா. வித் ஆல் மை ஹார்ட்..." என்று சொன்னான்.

(தொடரும்)

# சொல்லுங்களேன்!
# குடும்பத்தின் மிகவிருப்பமான ஆரோக்கிய பானமாக ஹார்லிக்ஸ் இருப்பது ஏன்?

## ரூ.5 லட்சத்திற்கும் அதிகமான பரிசுகளைப் பெறுங்கள் தமிழ் நாட்டில் மட்டுமே!



### முதல் பரிசு

ரூ. 75,000க்கும் அதிகமான
பெறுமானமுள்ள ஒரு
சொகுசு அம்பாசடர்
மார்க் IV கார்.

### 5 இரண்டாவது பரிசுகள்

மின்னும் தங்கநகை செட்டுகள்,
ஒவ்வொன்றும் ரூ. 25,000 மதிப்புடையது.





### 200 மூன்றாவது பரிசுகள்

அருமையான ஃபிலிஃப்ஸ்
'டு-இன்-ஒன்', ஒவ்வொன்றும்
ரூ. 1,500-க்கும் அதிகமான
மதிப்புடையது.

மேலும்

**800 முந்திக் கொண்டோர் பரிசுகள்!**

மாதத்தில் இரண்டுமுறை. முதல்
200 பூர்த்தியான நுழைவுத்-
தாள்கள் ஒவ்வொன்றுக்கும்
ரூ. 50 பெறுமான பரிசு.

8320

## போட்டிக்கதை: 1

அகிலா சிரித்துக் கொண்டே மறுபடியும் கேட்டாள்.

''எங்கே என்னைப்பார்த்துச் சொல்லுங்க; ஒண்ணும் இல்லையா? ஏன் தாத்தா, இப்படிப் பொய் சொல்றீங்க? உங்க மூஞ்சைப் பார்த்தாலே, தெரியுதே...!''

''கவலைப்படவோ கலங்கித் தவிக்கவோ புதுசா என்னம்மா இருக்கு? என்னதான் பலவந்தமா என்னை நானே கட்டுப்படுத்திக்கிட்டாலும் பழசெல்லாம் இப்படி எப்பவாவது நினைப்புக்கு வந்து கொஞ்சம் காலை இடறி விடற மாதிரி சில்மிஷம் செய்யுது...''

சாமிக் கண்ணுவும் சிரித்தார். வழக்கமான சிரிப்பல்ல அது. ஜீவனில்லாத வெற்றுச் சிரிப்பு.

மேலும் அவரை ஏதும் கேட்டு அவருடைய மனக்கலக்கத்தையும், வேதனையையும் அதிகப்படுத்த விரும்பாமல், அவர் முன் இருந்த காலிக் குவளைகளை எடுத்துக் கொண்டு உள்ளே வந்தாள் அகிலா.

'பாவம், கிழவர்' என்று மெல்ல முணுமுணுத்துக் கொண்டாள்.

அகிலாவும், அவளுடைய கணவன் சங்கரனும் காட்டும் அனுதாபம், பரிவு, கனிவு இவற்றின் பலத்தில்தான் அந்த ஜீவன் இன்னும் கட்டவிழ்த்துக் கொண்டு ஓடாமல் ஒரு பிடிக்குள் சிக்கிக் கொண்டிருந்தது.

ஆற்றுப் பாலத்தைத் தாண்டியதும் ஒரு சின்னப் பெட்டிக்கடை. அந்தப் பெட்டிக் கடைக்குப் பக்கத்தில் ஒரு தச்சுப்பட்டறை. விஸ்தாரமாக மேற்கூரைவேயப்பட்டு வெயிலின் சூடு தெரியாமல் சதா குளுகுளுவென்று ஓர் இதமான சூழ்நிலையைத்தந்து கொண்டிருக்கும். அங்கங்கே பலகைகள் குறுக்கும் நெடுக்குமாய். ஒரு மூலையில் மரத்துண்டுகளின் குவியல்.

''பலகையை அறுக்காம எங்கேடா பார்த்திட்டிருக்கே...?''

அந்தக் கரகரத்த குரலுக்குரியவர் சாமிக் கண்ணு.

நாற்பத்தைந்து வயசு சரீரம். ஐந்தரை அடி உயரத்திற்கு ஆள் கம்பீரமாக, வாட்ட சாட்டமாக மதமதர்த்த நெஞ்சும், ஆனை அச்சுறுத்தும் சங்கிலிக்கருப்பன் மீசையுமாய்த் தோற்றம் தருவார்.

தோற்றம்தான் அப்படி. கல்லுக்குள் ஈரமாய் அந்தச் சரீரத்தின் நெஞ்சுக் கூட்டிற்குள் மற்றவரை ஆதரவாகப் பார்க்கும் ஒரு சாதுகப் பார்வை.

அவருடைய மனைவி தனபாக்கியத்துக்குத் தன் பிள்ளையையும், பெண்ணையும் நன்கு படிக்க வைக்க வேண்டும் என்ற ஆசை. சாமிக்கண்ணுவுக்குக் கிடைக்கும் வருமானம் குடும்பத்தை நடத்திச் செல்லப் போதுமானதாக இருந்தாலும், அவ்வப்போது சிறு சறுக்கல்களும் ஏற்படுவதுண்டு. சில சந்தர்ப்பங்களில் தச்சுப்பட்டறை வேலை ஏதுமின்றிச் சோம்பேறித் தனமாய்த் தூங்கி வழியும்; தனபாக்கியம் இரண்டு மூன்று வீடுகளில் வேலை செய்து தன் பங்குக்குக் கொஞ்சம் சம்பாத்தியத்தைத் தேடிக் கொண்டிருந்தாள். அவற்றில் அகிலாவின் வீடும் ஒன்று.



வேலைக்கேற்ற கூலி என்று எந்தவித நிர்ணயமும் இடையாது. அகிலாவின் மனசைப் பொறுத்த விஷயம்.

வாரத்தில் இரண்டு மூன்று நாட்கள் நல்ல சாப்பாடு. பண்டிகை நாட்களில் துணிமணிகள், தின்பண்டங்கள்.

தனபாக்கியத்துக்குச் சலிக்கவில்லை. அதே நேரத்தில் அகிலாவின் அந்தத் தாராள மனசுக்கு நன்றி காட்டும் முகமாக அந்த வீட்டோடு தன்னை ரொம்பவும் ஐக்கியப் படுத்திக் கொண்டு விட்டாள்.

ஒரு வியாழக்கிழமைச் சந்தை.

''தனம்! நாலஞ்சு காய்கறி வாங்கிட்டு வந்திடு. இப்பவே போனா கொஞ்சம் எளசாப் பார்த்து வாங்கலாம். நாளைக்கு நோன்பு வேற வருது...''

பையையும் பணத்தையும் கொடுத்து அனுப்பினாள் அகிலா.

சந்தைக்கு எதிரே வி. ஆர். வி. அலுவலகமும், டெப்போவும். பத்து மணி ட்ரிப்புக்குத் தன்னைத் தாயாராக்கி செய்து கொண்டு ஒரு பேருந்து உள்ளிருந்து வெளிக் கிளம்பித் திரும்புகையில், தஞ்சாவூர் ரோட்டிலிருந்து ஒரு லாரி விசுவரூபமெடுத்து வேகமாக வருகிறது.

என்ன ஆயிற்று? எப்படி நடந்தது?

ஒன்றும் புரியவில்லை.

கத்தரியும், தக்காளியும் வேறு சில காய்கறிகளும் நசுங்கிச் சிதறி ரத்தக் கலவையாய் நிறம் காட்ட, தனபாக்கியம் ஒரு பக்கம் நசுங்கிக் கிடந்தாள்!



அன்று சாமிக்கண்ணு அலறிய அலறல். கூடவே தானும் போய்ச் சேர்ந்து விட முடிவு செய்தவரைப் போல் அவர் பாய்ந்த பாய்ச்சல். அப்பாவின் கையைப் பிடித்துக் கொண்டு, காலைக் கட்டிக் கொண்டு பிள்ளையும் பெண்ணும் கதறிய பரிதாபம்.

யுகப்பிரளயத்தின் மூலக்கூறு வடிவாய் ஓர் அவல நாடகம்.

''வாழ்க்கையிலே இனியும் எனக்கு என்னம்மா மிச்சம் இருக்குது? எதுக்காக வாழணும்? யாருக்காக வாழணும்...?''

ஆவேசமும், ஆத்திரமும் ஆர்ப்பாட்டமும் தணிந்து அடங்கி விரக்தியோடு மெலிதாய்ப் புலம்பிய நேரத்தில் அகிலாதான் சாமிக்கண்ணுவை அமைதிப்படுத்தினாள்.

காரியமெல்லாம் முடிந்து வந்த சொந்த பந்த ஜனமெல்லாம் போய்ச் சேர்ந்த பின் சாமிக்கண்ணுவுக்குச் சற்றுச் சிந்தித்துப் பார்க்க அவகாசம் கிடைத்தது.

பெண்ணுக்குப் பதினெட்டு வயது. ஒரு கட்டத்தோடு படிப்பை முடித்தாயிற்று. வீட்டோடு கிடந்து காரியமாற்றிக்கொண்டிருந்தாள். பையன் ப்ளஸ் டூவுக்குத் தாவ இரண்டு வருடங்களாய் முயன்று கொண்டிருந்தான்!

படிப்பில் அவனுக்கு நாட்டமில்லை என்பது எப்போதோ தெரிந்துபோன விஷயம்.

''பேசாம அவனை உங்க தச்சுப்பட்டறைக்கே கூட்டிக்கிடுங்க. வேலையைக் கத்துக் கொடுங்க. அதுலயாவது அவன் சாமர்த்தியமாய் முன்னேறி நாலு காசு சம்பாதிக்கக் கத்துக்கட்டும்...''

அகிலாவும், சங்கரனும் அப்படிச்சொன்ன போது அது சரியென்றே சாமிக்கண்ணுவுக்குப் பட்டது.

மேலக்கடைத் தெருவைத்தாண்டிப் பவித்திரமாணிக்கம் போகிற வழியில் வேலுடையார் மேல்நிலைப்பள்ளி. அதற்குப் பக்கத்தில் சிறிசும் பெரிசுமாய் அஞ்சாறு வீடுகள்.

மின் வாரியத்தில் லைன் மேனாக இருக்கும் சிவசாமியின் குடியிருப்பும், அங்குதான். அபிராமியை அவனுக்குக் கட்டிக்கொடுத்து விட வேண்டும் என்று சாமிக்கண்ணுவுக்கு ரொம்ப நாளாய் ஓர் ஆசை.

ஆள் சமமாக இருந்தான் என்பதோடு நல்ல வேலை. விசாரித்த அளவில் அவனைப் பற்றி அப்பழுக்காக யாரும் சொல்லவில்லை. அவனைப் பெற்றவர்களுக்கும் அபிராமியின் மீது ஒரு லயிப்பு.

'ஆனி மாசம் நல்ல முகூர்த்த நாளாய்ப் பார்த்து அதையும் இதையும் புரட்டிப் போட்டு, கையிருப்பையும் வைத்துக் கல்யாணத்தை முடித்து விட வேண்டியதுதான்.

''ஏம்மா! உனக்குச் சம்மதம் தானே...?'' என்று கேட்ட போது, அபிராமி சரியாகப் பதில் சொல்லவில்லை.

இரண்டாவது முறையாகக் கேட்டபோது, ''அதுக்குள்ளார என்ன அவசரம்?...'' என்று கேட்டாள்.

அபிராமியின் அந்தக் கேள்விக்கும் தயக்கத்திற்கும் அர்த்தம் வேறு என்பது மூன்றும் நாளே புரிந்து போயிற்று.

சாமிக்கண்ணுவுக்கு உதவியாகத் தச்சுப் பட்டறையில் வேலை பார்த்து வந்த சண்முகத்தோடு அபிராமி ஓடிப்போனாள்!

தனபாக்கியம் செத்துப் போன போது நெஞ்சு வெடிக்கக் கதறிய சாமிக்கண்ணு இம்முறை ரொம்பவும் வித்தியாசப்பட்டுப் போனார்.

'இந்த மாதிரிப் பொண்ணு இருந்தும் ஒண்ணுதான். போய்த் தொலைஞ்சாலும் ஒண்ணுதான்.'

மனசைக் கல்லாக்கிக் கொண்டு குளத்தாங் குளத்தில் மூன்று முறை முங்கியெழுந்து உடம்பு பூராவும் ஒட்டிக் கொண்டிருந்த மகளைப் பற்றிய வாசனையைத் துடைத்துத் தூர எறிந்தார்!

அகிலாவுக்கு ஆச்சரியமாக இருந்தது.

ஒரு பெரிய இடியை இவரால் எப்படி ஏற்றுத் தாங்கிக் கொள்ள முடிகிறது:

சாமிக்கண்ணுவுக்கு ஐம்பது வயசாயிற்று.

வாழ்க்கையில் பூரண சுகத்தைக் காணாத உடம்பு. அலுப்பும், அதிக உழைப்பும், அந்தச் சரீரத்தின் முறுக்கைத் தளரவைத்து முதுமையைக் கலந்து விட்டிருந்தது.

ஒரு சின்ன முக்காலியைப் போட்டுக் கொண்டு அதன் மீது ஒரு காலை மடித்துப் போட்டு அமர்ந்தபடி பட்டறையில் நடக்கும் வேலையைக் கவனித்துக் கொண்டிருப்பார்.

மகன் சிவக்கொழுந்து பட்டறை வேலையில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தான். அந்த அளவில் அவருக்குப் பரம திருப்தி. 'பிழைத்துக் கொள்வான்!'

தனபாக்கியம் போன பிறகு அகிலாவுக்கு கை ஒடிந்து போயிற்று. வேறு யாரையும் வீட்டு வேலைக்கு வைத்துக் கொள்ள மனசு இடம் கொடுக்கவில்லை.

ஒரு ஞாயிற்றுக்கிழமை சாமிக்கண்ணு வந்திருந்த போது அவரிடம் இதைப்பற்றிப் பேசினாள்.

அரை நிமிடப் பேச்சுதான்.

மறுநாளிலிருந்தே சாமிக்கண்ணு குற்றேவல் புரிய வந்து விட்டார்.

சங்கரனுக்கு ஒருநாள் சென்னைக்கு மாற்றல் உத்தரவு வந்து விட்டது. இன்னும் ஒரு வாரத்தில் புறப்பட்டாக வேண்டும்.

சாமிக்கண்ணு தவித்துப் போய் விட்டார். கண்கள் கலங்கிச் சிவந்தன. அப்படி ஓர் ஆன்மநேயம். உலகத்தை விட்டே போய் விட்ட பெண்டாட்டியை விட ஊரைவிட்டு மாற்றலாகிப் போகும் சங்கரன் தம்பதியினர் அவருள் பெரிதும் பாதிப்பை ஏற்படுத்தி விட்டார்கள்.

சாமிக்கண்ணு அந்தத் திமிதி உற்சவத்தைக் கண்டுவிட்டு, அம்மனைத் தரிசித்து விட்டுச் சலனமில்லாத மனத்தெளிவோடு வீடு திரும்பிய போது, சிவக்

## அருள்வாக்கு

நாம் பலவிதமான பொய்களாலேயே கஷ்டங்களுக்காளாகிறோம். பொய்யினால் பெறும் ஆனந்தமும் விரைவில் பொய்யாகி விடும். உண்மையில் எப்போதும் ஆனந்தமாக இருப்பதற்கு, எப்போதும் உண்மையாக இருக்கிறவனைப் பிடித்துக் கொண்டிருக்க வேண்டும். உண்மையாக இருக்கிறவன் ஸ்வாமி ஒருத்தன்தான். ஆசாமிகளாகிய நாம் அந்த சுவாமியைத்தான் பற்றிக் கொள்ளவேண்டும். கண்டம் கண்டமாக நாம் இருக்கிறோம். கண்டம் கண்டமாக இருப்பது எல்லாம் முடிவில் அகண்டத்தோடு ஒன்றுபடும் போது அகண்டமாக ஆகி, நிரந்தர ஆனந்தமாகி விடுகிறது.

அகண்டமாக இருப்பவன் ஒருவன்தான் இருப்பு. கண்டமாக இருப்பது வெறும் நினைவுதான். நினைவு கனவு எல்லாம் சாசுவத உண்மை அல்ல.

அகண்டமாக இருக்கிற பரமாத்மாவை கண்டம் கண்டமாக உருவமும் குணமும் உள்ளவனாக தியானம் பண்ணிக் கடைசி நிலையாக நிர்குணத் தியானம் செய்ய ஆரம்பித்தால்: சண்டை, பூசல் ஒன்றுமே வராது. துக்கம், பயம் எதுவுமே இராது. பரம சாந்திதான் இருக்கும். இதுதான் ஸ்ரீசங்கர பகவத்பாதர்கள் உபநிஷத மரத்திலிருந்து நமக்குப் பறித்துக் கொடுத்த பழம்.

இந்தப் பழுத்த நிலையை நாம் அடைவதற்கு முன் மொட்டாக, பூவாக, பிஞ்சாக, காயாக இருந்துதான் முதிர வேண்டும். பழுக்கும் நிலைவரைக்கும் பொறுமையாகத்தான் இருக்க வேண்டும். காயாக இருக்கும் போதே பழமாவதற்கு அவசரம் காட்டி வெம்பி விழுந்து விட்டால் பயன் இல்லை. 'வெம்பி விழுந்திடுமோ?' என்று ராமலிங்கர் சொல்கிறார். நமக்கும் அந்தக் கவலை இருக்கவேண்டும். கனிந்த பழம் ஆகும் வரையில் பூஜை, ஜபம், தபம் எல்லாம் இருக்க வேண்டும். வேதத்தின் அந்தத்தில் இருக்கும்படியான தத்துவம் என்கிற உண்மை நிலைக்கு நாம் வரும் வரையில் அவை வேண்டும். அப்போதுதான் வெம்பாது பழுக்கும். கடைசியில் அந்த தத்துவம் மூலம் — எங்கே இருக்கிறது? தன்னிடத்திலேயேதான் இருக்கிறது. எந்த அறிவு தத்துவத்தை ஆராய்கிறதோ, அந்த அறிவுக்குள்ளேயே இருக்கிறது என்பதை அனுபவத்தில் உணரலாம்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்



பட்டுப் புடவை

# பரிசுத் திட்டம்

## பெண்ணொன்று பிறந்து விட்டால்...

போட்டி 18:



பெண்களுக்குச் சகலத்திலும் சம உரிமை என்று நிறையவே பேசப்படுகிற நாள் இது. இருப்பினும் அப்படி சம உரிமை கிட்டாததால் நீங்களே மனம் நொந்திருக்கலாம் அல்லது ஒரு பெண் வருந்துவதைக் கண்டிருக்கலாம். அந்த நிகழ்ச்சியைச் சுருக்கமாகக் கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். பிரசுரமானால் பரிசு. தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டுப் புடவை. அதனைப் பெறுபவர் ஆண் வாசகராயின் பிரியமானவருக்குத் தந்து மகிழலாம். உறையின் மீது ''பெண்ணொன்று பிறந்து விட்டால்'' என்று குறிப்பிடவும்.

முடிவு தேதி: 17.9.84.

**35 பட்டுப்புடவைகள் காத்திருக்கின்றன. வாரம் தவறாமல் போட்டிகளில் பங்குபற்றி அவற்றில் ஒன்றைப் பெற முயலுங்கள்.**

என் பெயர்: ........................................

விலாசம் : ........................................

........................................

கொழுந்து போன மாசமே கல்யாணமாகித் தன்னுடன் குடும்பம் நடத்த வந்த மனைவி பூங்காவனத்தோடு வாதப் பிரதிவாதம் நிகழ்த்திக் கொண்டிருந்தான்.

வெறும் வாய்ப் பேச்சோடு இருந்திருந்தால் சாமிக்கண்ணு அதிர்ச்சிக்குள்ளாகியிருக்க மாட்டார்.

சிவக்கொழுந்துவின் முரட்டுக்கைகள் பூங்காவனத்தின் கன்னம், முதுகு, தலைமுடிகளோடு உக்கிரமாய்ப் போர் நிகழ்த்திக் கொண்டிருந்தன.

விரைந்து அந்தக் கைகளை விலக்கப் போன போது தான் புரிந்தது.

சிவக்கொழுந்து குடித்திருந்தான்!

''டேய்! இது எப்பலேர்ந்துடா...?''

சாமிக்கண்ணுவின் வார்த்தை வீச்சு விட்டு முகப்பைத் தகர்க்கிற மாதிரி ஒலித்தது.

''ஏன்? எப்பலேர்ந்துன்னு நான், நட்சத்திரம் குறிச்சுக் கொடுக்கணுமா? உன் வேலையைப் பார்த்துக்கிட்டுப் போ அப்பாலே! இது எங்க குடும்ப விவகாரம். மூணாம் மனுஷனுக்கு இங்கே வேலையில்லே!''

சிவக்கொழுந்து இன்னும் துள்ளிக் கொண்டிருந்தான்.

'மூணாம் மனுஷனுக்கு இங்கே வேலையில்லே...!'

''தகப்பனைப் பார்த்து மகன் பேசற பேச்சாம்மா இது? பட்டினி கெடந்து உசிரை விட்டாலும் விடுவேனே தவிர இனிமே அவனோட நிழல்லே தங்கிக் கஞ்சி காய்ச்சச் சொல்லிக் குடிக்க மாட்டேன்...''

ஒரு வீர சபதம் மாதிரி நெஞ்சை நிமிர்த்தி ஓங்கித் தட்டித் தம் வைராக்கியத்தை வெளிப்படுத்திக் கொண்டார் சாமிக்கண்ணு.

அகிலாவும், சங்கரனும் யோசித்தார்கள். நடப்பை ஆராய்ந்தார்கள். விவாதித்தார்கள்.

முடிவில்—

சாமிக்கண்ணு தாத்தாவும் ரெண்டு வேட்டி, சட்டைகளோடு அவர்களுடன் சென்னைக்கு ரயிலேறினார்.

அன்று சாமிக்கண்ணுவின் கையைப் பற்றிக் கொண்டு பள்ளிக்கூடம் போய்வந்து கொண்டிருந்த சங்கரன் தம்பதியினரின் குழந்தைகள் இன்று வளர்ந்து பெரியவர்களாகி விட்டார்கள்.

சங்கரன் படித்த படிப்புக்கு ஏற்ற மாதிரி அவனுடைய தகுதியும் இப்போது ரொம்பவும் உயர்ந்திருந்தது. பெரிய உத்தியோகம், கார், பங்களா என்று ஒவ்வொன்றாய்ச் சொந்தம் கொண்டாடிக் கொண்டு வந்தது.

அந்த அந்தஸ்துப் பெருமையிலும் சாமிக்கண்ணுவின் மீது அவர்கள் வைத்திருந்த பற்றுதலும் பாசமும் மாசுபடாமல் இருந்தன.

ஒரு நாள்.

அலுவலகத்திலிருந்து வீடு திரும்பிய சங்கரன் ஒரு புதிய செய்தியைக் கொண்டு வந்தான்.

மறுபடியும் மாற்றல். இம்முறை பதவி உயர்வோடு அவனைக் கோயமுத்தூருக்கு மாற்றியிருந்தார்கள்.

சாமிக்கண்ணுத் தாத்தாவையும் உடன் அழைத்துச் செல்வதா? அவர் பிள்ளையை வரவழைத்து அவனிடம் ஒப்படைத்தால் என்ன?

ஒரு பிரச்னை முளை விட்டது.

மூன்று இரவுகள்.

கிழவருக்கு உறக்கமில்லை.

'இது எங்க குடும்ப வெவகாரம். மூணுவது மனுஷனுக்கு இங்கே வேலையில்லே' என்று சொன்ன பிள்ளை இங்கே வரப் போகிறான். தகப்பன் ஸ்தானத்தை எனக்கு மீட்டுத் தரப் போகிறான்! தந்து தனக்குக் கொள்ளி வைக்கும் உரிமையைப் பெறப் போகிறான்... ம்ஹூம்...'

வெள்ளிக்கிழமை.

கீழ்வானத்தில் வெளிச்சப் புள்ளிகள் லேசாகத் தெரிந்தன. இன்னும் முழுசாக விடியாத காலைப் பொழுது.

அந்த அரையிருட்டில் அங்கும் இங்கும் விசாரித்து வீட்டைக் கண்டுபிடித்து ஒருவழியாக வந்து சேர்ந்தான் சிவக்கொழுந்து.

வாயிற்திண்ணையில் கழுத்து வரை போர்த்திக் கொண்டு படுத்திருந்த உருவத்தைப் பார்த்தான். அருகில் சென்றான். மெல்லக் குனிந்து முகத்தை ஆராய்ந்த போது அடையாளம் கண்டு கொள்ள முடிந்தது.

'அப்பா...!' என வாய் நிறைய அழைக்க வேண்டும் போல் ஆசை. நெஞ்சில் கவிந்திருந்த துக்கம் பீறிட்டுக் கிளம்ப ஆயத்தமாகிக் கொண்டிருந்தது.

லேசான அசைவுகளின் துல்லியமான ஓசை கேட்டு வெளியே வந்தாள் அகிலா.

சிவக்கொழுந்துவைப் பார்த்தாள்.

''வாடா, இப்பவாவது அப்பனோட ஞாபகம் வந்து வந்திருக்கியே! பொண்ணு பிள்ளைன்னு ஒரு குடும்பமே ஒட்டுமொத்தமா அவரைச் சித்திரவதை செஞ்சிட்டீங்களேடா... ராஜா மாதிரி உட்கார்ந்து அதிகாரம் பண்ணிட்டிருந்த உடம்பாடா இது? எப்படி உருக்குலைஞ்சுப் போயிட்டார் பார்த்தியா...?''

கண்ணீரில் அவன் வெடித்தான். உடல் குலுங்க அழுதான்.

''இனியும் எதுக்காகடா அழறே? மனந்திருந்தி அதான் மனுஷனா வந்திருக்கியே... 'அப்பா'ன்னு கூப்பிடு. அவர்கிட்ட மன்னிப்புக் கேளு...''

அகிலா அவனை உசுப்பினாள்.

மெல்ல மெல்லத் தன்னை நிதானித்துக் கொண்ட சிவக்கொழுந்து, ''அப்பா...!'' என ஈனசுரத்தில் குரல் கொடுத்தான்.

கடந்த மூன்று நாட்களிலான, உணர்வுகளின் உக்கிரமான விழிப்பில் சிக்கித் திணறிக் கொண்டிருந்த சாமிக்கண்ணுத் தாத்தா இப்போது அந்த உணர்வுகளின் பிடியிலிருந்து விலகி அமைதியாக உறங்கிக் கொண்டிருந்தார்!


"எப்படி இருந்தாலும் அந்த டி.வி. பொண்ணு டிரஸ் பண்ணிட்டிருக்கா மாதிரி இல்லாம இப்படி ராகமாலிகா சேலையை கட்டிட்டுதாண்டா பண்ரு அதுவரைக்கும் க்ஷேமம்."
"இவளாலே பேஜாரா போச்சப்பா ஒலிம்பிக்ஸ் டி.வியிலே வந்ததும் இவளும் ஆரம்பிச்சுட்டு நாளைக்கு பூசாரியை கூப்பிட்டு மந்திரிக் கலாம்னு இருக்கேன்."

தஞ்சை கோவிலின் பிராகாரத்தில் நான் பார்த்த அவன் என்னை அதிகமாகவே திடுக்கிட வைத்தான்.

ராஜேஷ், சென்ற வருடம் சென்னைக்கு மாற்றல் ஆகும் வரை அலுவலகத்தில் என்னுடைய சக ஊழியன். அவன் கடவுளை நம்ப மாட்டான். கோவிலுக்குப் போகமாட்டான்.

கோவிலுக்குப் போவதெல்லாம் வெளி வேஷம் என்பது அவன் வாதம்.

''டேய், என்னடா? இது வேஷம்!''

''வேஷம் ஒன்னுமில்லை. எல்லாம் காரணமாகத்தான்'' ராஜேஷின் குரல் கம்மியிருந்தது.

அடுத்து அவன் சொன்ன செய்தி என்னைத் திடுக்கிட வைத்தது. அவன் மனைவி கமலாவுக்கு லேசாக வயிற்று வலி ஏற்பட்டு மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றதில் அவளுக்கு வயிற்றில் புற்றுநோய் முற்றி விட்டதாகவும் குணப்படுத்துவது கடினம் என்றும் மருத்துவர்கள் கூறியதால் தன்னுடைய கொள்கையை விட்டு ஆண்டவனைத் தரிசிக்க வந்ததாக அவன் கூறிய போது என் கண்கள் கலங்கி விட்டன.

பேசிக் கொண்டே அவனுடைய அக்கா வீட்டை அடைந்தோம். அங்கு தான் அவன் தற்போது தங்கியிருந்தான்.

வாடியபடி வரும் எங்கள் இருவரையும் கையில் கடிதத்துடன் கண்ணில் சந்தோஷத் துடன் வரவேற்றார் அவனுடைய மாமா.

''எக்ஸ்ரே'' மாறி விட்டதால் தவறு நேர்ந்து விட்டதாகவும், கமலாவிற்குச் சாதாரண வயிற்று வலிதான் என்றும், கமலா விரைவில் குணமடைந்து விடுவாள் என்றும் மருத்துவமனையில் சொன்னதாக அவனுடைய மாமனார் கடிதம் எழுதியிருந்தார்.

ராஜேஷின் பிரார்த்தனை பலித்து விட்டது என்று அவன் முகத்தைப் பார்த்தேன்.

''மாமா, நாளை காலை சென்னை சென்று கமலாவைப் பார்த்துவிட்டு, அப்படியே காஞ்சிபுரம் செல்கிறேன். பிறகு அப்படியே திருப்பதியும் செல்கிறேன்'' என்று கூறிவிட்டு ராஜேஷ் உடனே புறப்பட்டான்.

''என்னடா இது? கமலா தான் குணமடைந்து விடுவாள் என்று சொல்லி விட்டார்களே! இன்னும் ஏன் நீ கோவில், கோவிலாய் அலைய வேண்டும்'' என்றேன்.

''டேய் சந்துரு, என் மனைவிக்குக் குணமாய் விடும் என்பது உண்மைதான். ஆனாலும் அந்த எக்ஸ்ரே வேறு யாரோ ஒரு சகோதரியுடையதுதானே! அவள் உயிருக்கும் ஆபத்துத்தானே! அந்த முகம் தெரியாத சகோதரிக்காகத்தான் நான் இனிமேல் வேண்டிக் கொள்வேன்'' என்ற ராஜேஷின் பதில் என்னை ஸ்தம்பிக்க வைத்துவிட்டது.



மனிதன் மனிதனாகவே...

மனிதன் பறவை போல வானில் பறக்க உதவுவது — விஞ்ஞானம்.
மனிதன் மீனைப் போல நீரில் நீந்த உதவுவதும் விஞ்ஞானம்.
ஆனால் மனிதன் மனிதனாக நடக்க உதவுவது திருக்குறளே!
—தி. ஆ. பெ. விசுவநாதம் உரையிலிருந்து நெ. அன்புசெழியன்.

அரசியல் கிரிக்கெட்...

கிரிக்கெட் வீரரான குண்டப்பா விஸ்வநாத், அரசியலில் குதிக்கப் போகிறார். விஸ்வநாத் பாரதிய ஜனதா கட்சியில் சேருவார் என்று எதிர் பார்க்கப்படுகிறது. சமீபத்தில் பா. ஜ. கட்சியில் சேர்ந்தவர் கன்னட நடிகை ஆர்த்தி.
நன்றி: தி வீக், கணபதிசுப்பிரமணியம்.

உவமை

மடங்களில் மூட்டை மூட்டையாய்ச் சாம்பிராணி வாங்கிப் போடுவார்கள். நாளடைவில் அது மட்கி விடும். பிறகு அதை எடுத்துப் புகைத்தால் வாசனையே வராது. அதனால் தான் அதை உவமை கூறுகிறார்கள்.
—கி. வா. ஜ. வின் விடைகள் — நூலிலிருந்து: ஆரூர் பாஜ.

பதவி வேண்டாம்!

சி. பி. ராமசாமி ஐயர் வழக்குரைஞரா[க] ... அ...
புரிந்து வந்த போது நீதிபதி பதவிக்கு ...
தேடுத்திருப்பதாகத் தலைமை நீதிபதியிடமிரு...
வந்தது. நகைச்சுவைப் பாணியில் தலை...
இவ்வாறு பதில் எழுதினார், சி. பி.:
"நான் முழுவதும் பிறர் உளறல்களை...
டிருப்பதைக் காட்டிலும் சில மணி நேரங்க...
விட்டுப் போவது மேலானது என்று நா...
தாங்கள் பொசிக செய்த பதவியை ஏற்க வி...

ஞாயிறு பகல் 1...

ஞாயிற்றுக்கி...
பாப்புலரான "டிஃ...
ஹீரோ பெயர்தான்...
கோளாறு காரணமா...
மூன்றுமுறை அ...
ஆருண்டுசனுக்கு
பட்டது. 5 வயதி...
வருகிறான். அப்ப...
சான்ஸ் வர அ...
டிருந்த அவன் ...
வேலையை விட்...
டாளர்கள் — ...

நடமாடக் கூடாதவர்கள் யார்?

இரவு வேளைகளில் தெருக்களில் செல்...
வழிமறித்துக் கற்பழிக்கும் குற்றங்கள் அதிகரி...
பற்றி கோல்டாமேயர் காலத்தில் இஸ்ரேல்...
ஆராயக் கூடியது.
மந்திரிகளில் ஒருவர் சொன்னார்: "...
பெண்கள் தெருவில் நடமாடாமலிருக்கட்...
அதற்கு கோல்டாமேயர் சொன்னா...
பெண்களை வழிமறித்துக் கற்பழிக்கிற...
இருட்டிய பிறகு ஆண்கள்தான் நடக்கக் ...
அல்ல."
தகவல்: ...

தெரிய மெ...

"தவறு...
யுங்கள்: ...
ஆனால் ...
யுங்கள்."

தொழில்
க் தேர்ந்
உத்தரவு
நீதிபதிக்கு

ட்டுக்கொண்
ாமே உளறி
கருதுவதால்,
ல்லை!''
ந. இராமன்.



ி

களில் ஒளிபரப்பப்படும் ரொம்பப்
ட் ஸ்ட்ரோக்'' தொடரின் (குட்டி)
ஞல்டு. வயது 11. ஏதோ ஹார்மோன்
வன் வளர்ச்சி தடைப்பட்டு விட்டது.
' சிகிச்சை செய்யப்பட்டிருக்கிறான்.
மாற்றுச் சிறுநீரகமும் பொருத்தப்
லே, ஆர்னல்ட் 'மாடலிங்'கில் ஈடுபட்டு
தான் சினிமா சான்ஸ். மகனுக்கு சினிமா
த்ததும், நர்ஸ் வேலை பார்த்துக்கொண்
ர், மகனைக் கவனித்துக் கொள்வதற்காக,
டார். சிறுவனின் வருமானம் — 1600
துக்கு!

—ஜூலி.



பெண்களை
த் தடுப்பது
மந்திரிசபை!

ட்டிய பிறகு
!''
' ஆண்கள்தான்
. தெருவில்
. பெண்கள்
து.

வை. நித்திலன்.

ும் பெரிய அர்த்தம்

வேண்டுமானாலும் செத்து
போகுது!
தாலேந்து நீங்களே செத்து
க்காக —லெஸ்ஸிங்.

''எப்படிப்பட்ட வார்த்தைப் பின்
னல்களும் தோற்றுவிக்காத உணர்ச்
சியை, சாயாசக் கையாளப்பட்ட
சிறிய மௌனம் உணர்த்திவிடும்.''
—மார்க் ட்வெயின்

தொகுப்பு: இராம சண்முகம்.

## ஷா கொடுத்த தந்தி

பெர்னுட்ஷாவின் நாடகம் ஒன்றை நியூயார்க்கில் நடத்த ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. நாடகம் சற்று நீளமாக இருந்ததால் அதைச் சுருக்கினுலொழிய நாடகம் பார்த்து விட்டு நகருக்கு வெளியே உள்ள பகுதிகளுக்குப் போகிறவர்களுக்கு — ரயில் தவறி விடும் என்று தோன்றவே, கீழ்க்கண்டவாறு தயாரிப்பாளர்கள் ஷாவுக்குத் தந்தி கொடுத்தார்கள். ''ரயிலில் போகிறவர்கள் வசதியை உத்தேசித்து, செயிண்ட் ஜோனின் நான்காவது அங்கத்தை மாற்றுக'' ஷாவிடமிருந்து வந்த பதில் தந்தி; ''ரயில் நேரத்தை மாற்றுக.''

—மஞ்சுதேவன்.



## ராசிபுரத்தாரின் ராசி!

நாவலாசிரியர் ஆர். கே. நாராயண் (வயது 78), 'பாலிடிக்ஸ்' பற்றிக்கேட்டால், ''அதைப் பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும் அதுபற்றிக் கவலைபடுவதற்கு என் சகோதரர் (ஆர். கே. லக்ஷ்மண்) உள்பட ஏராளமான பேர் இருக்கிறுர்களே!'' என்கிறுர். இவரது முழுப்பெயர் ராசிபுரம் கிருஷ்ணசாமி நாராயணசாமி என்பது எத்தனை பேருக்குத் தெரியும்?

—ஜூலி.



# வேங்கை வனம்

## அத்தியாயம் 19

## அசோகவனம்

வேங்கைவனத்து வேங்கை வேந்தன் வந்துவிட்டான்...

உயிரோடு நிற்க வைத்துத் தோலை உறிக்கிறார்கள்...

கோட்டை நடுவீதியில் முக்கோணக்கம்பு கட்டித் தொங்கப் போடுகிறார்கள்.

உடல்கள் நடுங்கிச் சிலிர்த்து வியர்த்துக் கொட்ட காளிங்கனும் இளங்கோவேளானும் மேலே சொன்னவாறு கற்பனை செய்து கதிகலங்கிக் காணப்படுகிறார்கள்.

சிலையைக் கடத்துவதை விட்டு, தான் தப்புவது எவ்வாறு என்று ஆராய்கிறான் காளிங்கன். முடிகிற காரியந்தானா என்று பெருமூச்சு விடுகிறான் இளங்கோவேளான்.

அந்த சமயத்தில் ஏதோ புதையல் கண்டவன் போல ஓடி வருகிறான் பாண்டிய வீரன். ''சேனாதிபதி அதோ பாருங்கள்; சிலை வைக்கப்பட்ட இடத்துக்குக் கீழே சுரங்கம்!''

சுரங்கம், சுரங்கம், சுரங்கம்...

சென்று கவனிக்க—

ஏதோ ஒரு மர்மத்துக்காகவே அங்கு தோண்டப் பெற்றிருந்த சுரங்கம் எங்கோ நோக்கி நீண்டு கொண்டிருந்தது.

''காளிங்கரே! சிலையையும் இச்சுரங்கம் வாயிலாகக் கொண்டு போனால் என்ன?'' என்றான் ராஜவிசுவாசியான இளங்கோ வேளான்.

காளிங்கனுக்கு ஆத்திரம் பொங்கியது. அது அவனது துரோக விசுவாசம்.

''இளங்கோ! இப்போது நாம் உயிருக்குப் போராடும் நிலை. இந்நிலையில் சிலையைக்கடத்துவதாவது?''

''இல்லை காளிங்கரே! முடிந்த வரை முயல்வோம். உயிருக்கு ஆபத்து என்று வருகிற போது நாம் வேறு வழியைக் கையாள்வோம்.''

இவ்விதம் கூறிய இளங்கோ வேளான், தனது வீரர்களை நோக்கி, ''நாங்கள் உள்ளே நுழைந்ததும் கணமும் தயங்காமல் சிலையைத் தூக்கிக் கொண்டு சுரங்கத்துக்குள் இறங்கி விடுங்கள். வேகமாக எங்களைப் பின்பற்றி வரவேண்டும்'' என்றான்.

''இளங்கோ முடிகிற காரியந்தானா? சிலையின் பளுவென்ன? இருப்பது பதின்மர். மேலும் சுரங்கம் எங்கு சென்று முடியும் என்று இப்போது சொல்வதற்கில்லை. இருந்தாலும் அரச அதிகாரம் பெற்றவர் நீங்கள். நான் மறுத்துச் சொல்வதற்கில்லை. நடக்கட்டும்!''

முரசம் இன்னமும் முழங்கிக் கொண்டிருக்கிறது.

வருகை தந்த வேங்கைமார்பன், இன்னமும் அரண்மனை வாயிலை அடையவில்லை என்பதை அது காண்பிக்கிறது.

முரசத்தைத் தொடர்ந்து ராஜபுலிகளான வேங்கைகளின் உறுமல் சத்தம் கணத்துக்குக் கணம் அதிகரித்துக் கொண்டிருக்கிறது.

காளிங்கனும், இளங்கோ வேளானும் சுரங்கத்துக்குள் நுழைந்ததைத் .தொலைவில் இரும்பு வேலிக்குப் புறத்தே இருக்க காவலர்கள் கவனிக்கவில்லை. சிலையைத் தூக்கிக் கொண்டு வீரர்கள் சுரங்கத்துக்குள் இறங்குகிற போது தான் கவனித்து விட்டார்கள்.

அவ்வாறு ஒரு சுரங்கமிருப்பது அவர்களுக்கே தெரியாததலால், அமைச்சருக்குத் தெரிவிக்க அவர்கள் விரைந்தோடினர்.

இப்படி ஒரு நிகழ்ச்சி ஏற்படும் என்பது யாரும் .எதிர்பாராதது.

காளிங்கன் இப்போது இளங்கோவேளானையோ, பாண்டியரது ஆணையையோ, சிலை பற்றிய சிந்தனையோ இல்லாமல், தான் மட்டும் தப்பிப் பிழைத்தால் போதும் என்று சுரங்கத்து இருட்டில் கண்களை இடுக்கியமாக்கி விறுவிறுவென்று நடக்கிறான்.

ஓர் ஆள் மட்டுமே நுழைந்து செல்லக் கூடிய அந்தச் சுரங்கத்துக்குள் சிலையை எடுத்துச் செல்ல வீரர்கள் தவியாய்த்தவிக்கிறார்கள். இளங்கோவேளான் அதட்டலுடன் கர்ஜிக்கிறான்.

சிலையை நீளவாட்டில் பிடித்துக் கொண்டு வீரர்கள் தட்டுத்தடுமாறி நடக்கிறார்கள்.

வேங்கைமார்பன், தனது தனிப்பட்ட நலனுக்காகத் தோண்டப் பெற்ற சுரங்கம் அது. .முதலில் வேங்கைவனத்துப் பளிங்கு மாளிகையின் தனியறையிலிருந்து செல்லும் அந்தச் சுரங்கத்தை, அண்மையில்தான் சிலை நிறுவிய அடிவாரத்திலிருந்து ஒரு வழி வகுத்துத் தோண்டியிருந்தான்.

எல்லா வலிமைகளையும் சுரங்கங்களையும் கொண்ட கானப்பேர் கோட்டை ஒருகால் துரதிர்ஷ்டவசமாக எதிரிகள் பால் பிடிபடுமேயானால் இச்சுரங்கம் வாயிலாக சிலையோடு தப்பித்துச் செல்லச் செய்த ஏற்பாடு. அவனது தூயதான காதல் அந்த அளவுக்குச் சுரங்கம் போல நீண்டிருந்தது.

அந்தச் சுரங்கப் பாதை ஏரெயில் கோட்டை. மதிலுக்குத் தெற்குப் புறமாக முடிகிறது.

ஒலித்த முரசம் ஓய்வு பெறுகிறது.

வேங்கைமார்பன் அரண்மனை வாயிலை அடைந்து விட்டானும்!

அதற்குள் அரசியல் அதிகாரிகள் அனைவரும் அரக்கப்பறக்க முகம் கழுவி, பின்னால் குளித்துக் கொள்ளலாம் என்கிற முடிவுடன் அரசாபரணம் பூண்டு, அங்கே வருகை தந்திருந்தனர்.

அமைச்சர் குறுமலைக் கிழாரோ, ஒன்றும் புரியாமல் அக்கினிக்கு நடுவே அகப்பட்டுக் கொண்டது போலத் துடிக்கிறார். உடனடியாகச் சிலையை அகற்றும் பணியில் ஈடுபட்டவர்களை நிறுத்துமாறு உத்தரவு பணிக்கத் திரும்புகிற போது—

அந்த வேங்கைவனத்து வீரர்கள் ஓடோடி வந்து நடந்த செய்தியைக் கூற...

நடுநடுங்கிப் போனார் குறுமலைக்கிழார். அவரது நரைத்த மீசையை நீவி விட்டுக் கொள்கிறார்.

பக்கத்தில் நின்றிருந்த உபசேனாதிபதி ராஜசிங்கனிடம் ஏதோ அவசர அவசரமாக ரகசியமாகச் செய்தி · கூறுகிறார்.

ராஜசிங்கனும், அவசரம் புரிந்து சில வீரர்களைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு வேங்கைவனம் நாடிப் புரவிகளில் பறக்க...

ஏனையவர்கள் ஒன்றும் புரியாது விழிக்க...

அந்த நேரம் பார்த்து ரதம் அரண்மனையை அடைந்து நிற்கிறது.

படுவேகமாக வந்த ரதப் புரவிகள் கால்களை அழுத்தமாக ஊன்றி நிற்க முடி

**கோவி. மணிசேகரன்**



யாமல், வாயில் பஞ்சு நுரை போல விலாழி தள்ள இப்படியும் அப்படியுமாக அலைமோதுகின்றன.

வீரர்கள் ஓடோடி வந்து குதிரைகளின் சேணங்களைப் பற்றி அவிழ்த்து விடுகிறார்கள். குதிரைகள், வேங்கைகளின் உறுமல்களை மீறிக் கனைக்கின்றன.

பெருமைமிகு கீழ வீதியில்...

பேரூலயின் உயிர்ப் பிழம்பு நான் என்பது போல வான சாம்ராஜ்யத்து ஏகசக்ராதிபதியாய் மணிக்கதிரோன் உதயமாகிக்கொண்டிருக்கிறான்.

ரதத்தில் உதயம் கண்டிருந்த பாண்டியப் பேரொளி கண்டு பலப்பல கண்கள் கவிதை புனைய யாப்பிலக்கணத்தை அவசர அவசரமாகப் புரட்டுகின்றன.

ஏற்கெனவே பிரம்மனால் பாடப்பட்ட தேவ கவிதையை நோக்கிய வேங்கை மார்பன், ''என் இனிய சௌந்தரியமே! இறங்கி வரலாமே!'' என்று கூறியவாறு ரதத்தை விட்டிறங்குகிறான்.

சிலையாய் வேங்கைவனத்தில் அறிமுகமான அழகுக் கவிதை, இப்போது ஜீவச்சிலையாய் தங்கள் முன் தரிசனம் தருவது கண்டு அனைவருமே கரம் கூப்பி வரவேற்கிறார்கள்.

தங்கள் எதிர்கால வேங்கை ராணியாயிற்றே!

குறுமலைக்கிழார் மட்டும் குலை நடுங்கிக் காட்சி தருகிறார். இந்நேரம் அங்கே என்ன நடைபெற்றிருக்கிறதோ?

தியாகவல்லி, மெல்ல திருமேனியின் பூவனைய தோள்களைப் பூப்போன்று பற்றி இறங்குமாறு கண்களால் வேண்டுகிறாள்.

'அடித் துரோகி' என்பது போலக் கவனிக்கிறாள் திருமேனி.

'நான் துரோகியல்ல; உனது வாழ்வாகிய நிவேதனத்துக்குரிய நிலையான நெருப்பு' என்பது போலக் கவனித்து, முதலில் ரதத்தை விட்டிறங்கிப் பின்னர் கைலாகு கொடுக்கிறாள் தியாகவல்லி.

தியாகவல்லியின் கையைத் தட்டிவிட்டுத் தானாகவே இறங்குகிறாள் திருமேனி. இன்னும் மயக்கம் பூரணமாகத் தெளியவில்லை. சற்றே தடுமாற, தியாகவல்லி பற்றிக் கொள்ள, ''நீ ஒரு பெண்ணா?'' என்று கூறி ஒதுக்கி விட்டாள் திருமேனி.

வெறுமையுடன் சிரித்துக் கொண்ட தியாகவல்லியோ, ''அதனால் தான் ஒரு பெண்ணுக்கு என்னைப் பலி கொடுத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறுகிற போது, அவளது சாம்பிய கண்களில் சஞ்சலம் ராஜகீதத்தைச் சோகமாக இசைக்கிறது.

திருமேனியின் நெருப்பனைய கண்களோ, ராஜகீதத்தின் ஆதார சுருதியான வேங்கை மார்பனை நோக்குகின்றன.

இரவு ஒரு ஜீவன்முக்தனாகக் காட்சித் தந்தவன், இப்போது ஜீவபுருஷனாகத் தோற்றம் தந்து கவனிக்கிறான்.

''உள்ளே வரலாம் திருமேனி! இது உனது அரண்மனை! ஏன்? எனது இதயம், இதயம்...''

சொற்கள் தடுமாறுகின்றன.

''வேங்கைவனத்துச் சோங்கையே!... ஏன் அப்படி அதிர்ச்சியுடன் பார்க்கிறீர்கள்? உங்களை நான் வேங்கை என்று அழைக்க மாட்டேன்; உங்கள் செய்கை, அழைக்க நாணச் செய்கிறது! நான் சிறைக்குரியவள்! அரண்மனைக்குரியவளல்ல.''

''திருமேனி! தமிழின் தவச் செல்வி! நீ என்னை எப்படி அழைத்தாலும் அது உனது தமிழ் நாகரிகத்துக்குரியது!''

''நாகரிகம் பற்றி நீங்கள் பேசுகிறீர்களா? சகோதரா என்றழைக்கக் கூடத் தகுதியற்றுப் போய் விட்டீர்களே?''

''நிச்சயமாக நான் அதற்குத் தகுதியில்லை.''

விழிப்பில் சிலிர்ப்பு கண்டாள் வேல்விழித் திருமேனி.

''திருமேனி...!''

''உஸ்! எனது பெயரை உங்கள் நாவால் அழைக்க வேண்டாம்! வேங்கை வனத்தில் எனது சிலையை அவமதித்து இருப்பதுபோல, என்னையும் அங்கேயே சிறை வைத்துச் சித்திரவதை செய்யலாம்...''

''திரு...''

''ம்ம்! என்னைப் பொறுத்த வரையில் இது அவமானம் தான்! சீதை இருந்தது அசோகவனம்! நானிருக்கப் போவது வேங்கைவனம்!''

''ஆனால், நான் ராவணனல்ல; ராவணன் மாற்றான் மனைவியைக் கவர்ந்து வந்து அசோக வனத்தில் வைத்தான்; நான் எனது மனைவியைக் கவர்ந்து வந்து வேங்கைவனத்தில் வைத்திருக்கிறேன்.''

''தீர்மானிக்க வேண்டியவர்கள் எதிர்கால வால்மீகிகள்! நானும் உங்கள் மனைவியல்ல; நீங்களும் எனது புருஷனல்ல. அசோகவனம் எங்கே இருக்கிறது?''

''இது, வேங்கைவனம், உனது உல்லாசத்துக்காகவே உருவாக்கப்பட்ட பளிங்கு மாளிகை!''

''இப்போது அது கண்ணீர் மாளிகையாகப் போகிறது! பிறகு செந்நீர் மாளிகையாகும்! அதன் பிறகு செந்தீயால் எரியும் சாம்பல் மாளிகையாகப் போகிறது! எனது தந்தை பெருவழுதியல்ல; உக்கிரப் பெருவழுதி!''

திருமேனியின் குரலில் உக்கிரம் ரத்தத் தாண்டவம் புரிகிறது.

''அமைதி திருமேனி! அதோ ராஜபல்லக்கு வருகிறது. அமைதி கொள். பிறகு எனது இதயம் புரியும். ஏறிச் செல்லலாம்.''

''அது பல்லக்கல்ல; என்னைச் சுமந்து செல்லும் பாடை!''

''திருமேனி!''

பதறிப் போனான் வேங்கைமார்பன்.

ஒருகணம் உற்றுக் கவனிக்கிறாள் திருமேனி.

''நான் சிறையெடுக்கப்பட்டவள்; நடத்தை ஒரு குற்றவாளியைப் போலச் செய்கிறேன்!''

''திருமேனி... திருமேனி, நீ நடப்பதா? சொல்வதைக் கேள்?''

''நீங்கள் சொல்வதை நான் கேட்பதா? நான் சாம்ராஜ்ய யுவராணி!''

''மறுக்கவில்லை; மதிக்கிறேன்! இன்று மட்டும் நான் சொல்வதைக் கேள்; நானே

முதல் நீ சொல்வதை நான் கேட்கிறேன்! நீ சாம்ராஜ்ய யுவராணி மட்டுமல்ல; வேங்கைக் கோட்டையின் மகாராணி!''

''அண்ணனைத் தங்கை மணப்பதாவது?''

அவ்வளவுதான்...

அடுத்தகணம்...

''திருமேனி...!'' என்று அந்தக்கோட்டையே அதிரும் அளவுக்குக் கர்ஜித்தான் வேங்கைமார்பன். அவனது குரல் கேட்டு வேங்கைவனத்து வேங்கைகள் அதை விட மீறிய சத்தமெழுப்பி உறுமிக் கத்துகின்றன.

திருமேனியோ, ஒரு வீரனை நோக்கி, ''வேங்கைவனம் எங்கே இருக்கிறது? என்னை அழைத்துச் செல்! ம்ம்!'' என்றாள் அதிகாரத் தொனியில்.

அவன் மன்னன் உத்தரவுக்கு எதிர் பார்த்துத் தயங்க...

ஓங்கிப் 'பளார்' என்று கன்னத்தில் அறைந்தாள் திருமேனி. ''என் உத்தரவு செல்லாதோ?''

ஒரு பெண்ணுள்ளத்தைப் பெண் புரிந்து கொண்டது போல, தியாகவல்லி அழைத்துச் செல்லுமாறு கண்களால் சமிக்ஞைசெய்ய...

அடுத்தகணம்...

முன்னே நான்கு வீரர்கள் மரியாதையின் பொருட்டு மீன் கொடித் தாங்கிச்செல்ல...

அறைப்பட்ட வீரன் வணங்கி வழி காட்ட...

பின்னே நான்கு வீரர்கள் தொடர்ந்து சென்றனர்.

சற்று நேரம் வரை திருமேனி செல்லும் திசை நோக்கிக் கவனிக்கிறான் வேங்கை மார்பன்.

அந்தச் சமயம் பார்த்து அருகே வந்து நின்ற அமைச்சர் குறுமலைக்கிழார், மெல்லக் கைகளைப் பிசைந்த வண்ணம், ''மன்னா!'' என்றார்.

''இது என் சொந்த விஷயம். யாருக்கும் தலையிட உரிமையில்லை'' என்று வேங்கை மார்பன் கூறிய போது சொற்களில் அனல் தெறித்தது.

''பாண்டியகுமாரி விஷயத்தில் நாங்கள், உங்கள் விருப்பத்துக்கு மீறிக் குறுக்கே நிற்கப் போவதில்லை. ஆனால் சற்றுமுன் உங்கள் பெயரைச் சொல்லி நமது காளிங்கன் ஓர் அசம்பாவிதமே நிகழ்த்திவிட்டார்!''

காளிங்கன் என்று சொன்ன பிறகு தான் வேங்கைமார்பனுக்குச் சிலையைக் கடத்த புறப்பட்ட செய்தியே நினைவுக்கு வந்தது.

''என்ன நடந்தது?''

வேங்கையின் உடல் சிலிர்ப்பே கண்டது.

அமைச்சர் குறுமலைக்கிழாரும் நடந்ததைத் துணிவாக எடுத்துரைத்தார்; நடந்து முடித்த கரங்க விஷயத்தையும் கூறி, உபசேனாதிபதி ராஜசிங்கன் அதனைக் கவனிக்கச் சென்றிருப்பதாகவும் கூறிவருகிறபோதே...

ஒரு பூகம்பத்தின் வெடிப்பே போன்று புயலெனச் சீறி, எதிரே இருந்த புரவியில் பாய்ந்து ஆரோகணித்து வேங்கைவனம் நோக்கிப் பறந்தான் வேங்கைமார்பன். தொடர்ந்து அனைத்து அதிகாரிகளும் குதிரைகளில் பாய்ச்சல் கண்டனர்.

வேங்கைவனம் நோக்கி நடந்து சென்ற திருமேனி திடுமென்று வேங்கைமார்பனும் ஏனையவர்களும் தன்னை முந்திக் கொண்டு எங்கோ வேகமாக விரைவது கண்டு திகைத்து நின்று கவனிக்கிறாள்.

என்ன நடந்திருக்கிறது!

நினைவுக்கு வருகிறது...

காளிங்கனும், இளங்கோ வேளானும் சிலையைக் கடத்த வந்து அதனைக் கடத்தியிருக்க வேண்டும். அது குறித்து செய்தி இப்போதைக்குத் தெரிய வந்திருக்கவேண்டும். அதனால்தான் இப்படிப் பிடரிசிலிர்க்க வேங்கைமார்பன் விரைந்து கொண்டிருக்க வேண்டும்.

விஷயம் இதுதானா? அல்லது வேறெது வேனும் இருக்கலாமா?

வேங்கைப்புலிகளின் உறுமல்கள் அளவுக்கு மீறிப் பயங்கரமாக ஒலிப்பதைச்செவி சாய்க்கிறாள் திருமேனி. ஐயயோ...

வேங்கைவனத்தை ஏன் தேர்ந்தெடுத்தோம் என்று நினைக்கிற போது அவளுக்கு வியர்த்துக் கொட்டியது. (தொடரும்)

---

மாவீரன் அலெக்சாண்டர் முன்னிலையில் டியோண்டஸ் என்ற கடல் கொள்ளைக்காரன் விசாரணைக்காகக் கொண்டு வந்து நிறுத்தப்பட்டான்.

அலெக்சாண்டர் ''இத்தகைய நாச வேலைகளைச் செய்ய உனக்கு எங்கிருந்து துணிவு வந்தது?'' எனக் கேட்டான்.

'' அரசே! உலகத்தையெல்லாம் அடக்கியாள வேண்டும் என்ற துணிவு உங்களுக்கு எங்கிருந்து வந்ததோ, அங்கிருந்து தான் எனக்கும் இத்துணிவு வந்தது'' என்றான் அவன்.

''அது என்ன அப்படிப் பேசுகிறாய்?''

''உண்மையாகத்தான் சொல்கிறேன் அரசே! என்னிடம் ஒரு கப்பல் இருப்பதால் நான் கொள்ளைக்காரன் என்று பேசப்படுகிறேன்; தங்களிடம் ஒரு மாபெரும் கடற்படை இருப்பதால் தாங்கள் மாவீரன் என்று புகழப்படுகிறீர்கள். நாம் இருவர் செயலில் வேற்றுமை இல்லையே'' என்று சொன்னான் டியோண்டஸ்.

அலெக்சாண்டர் அவனை விடுதலை செய்தான்.

ஆதாரம்: மேதைகள் வாழ்வில் சுவையான நிகழ்ச்சிகள்.
தகவல்: டாக்டர் நிர்மலா மோகன்.




உள்ள மதிப்புக்கு மேல் ஒற்றை ரூபாய் கூட
தந்துவிட மாட்டாள் லலிதா...

# அதனால் தான் அவள் ஸர்ஃப் வாங்குகிறாள்.

"ஆமா. ஸர்ஃப் தான் எனக்கு. அதுக்குக் கொடுக்கற பணம் முழுக்க முழுக்க மதிப்பு. அதுக்குக் குறைஞ்சு போவானேன் நான்—அதுவும் இந்த நாளிலே போய்."

**இருந்தாலும், மலிவு வாஷிங் பவுடர் வாங்கினீங்கன்னா பணமிச்சம் இருக்கத்தானே இருக்கும்?**

"கேலிக்கூத்து! மலிஞ்ச சரக்கு வாங்கறதுக்கும் மதிப்புள்ள பண்டம் வாங்கறதுக்கும் ஏகப்பட்ட வித்தியாசம் உண்டே."

**ஒத்துக்கறோம். மலிவுப் பவுடர்களைவிட அதிகமா அப்படி என்ன மதிப்பு இருக்கு ஸர்ஃப்லே?**

"அப்படிக் கேளுங்க. மலிவுப் பவுடரோட 1 முழுக் கிலோ பைக்குள்ளே இருக்கற அதே அளவுப் பவுடர் ஸர்ஃப் ½ கிலோ பேக்கிலே இருக்கு."

**ரெண்டு மடங்கா? அதென்னமா?**

"அதுதானுங்க ஸர்ஃப்! ஸர்ஃப் ½ கிலோ பேக்குலே உள்ள பவுடரை எடுத்து, மலிவுப் பவுடரோட காலியான 1 கிலோ பைக்குள் அப்படியே கொட்டினா கணக்கா பை ரொம்பிடும்."

**அப்படியேதான் இருந்தாலும்...**

"இருங்க. எடை பார்க்கப்போனா, ஸர்ஃப் மதிப்பு ரொம்ப ரொம்ப அதிகம்தான். ஸர்ஃப் மாதிரி வெளுப்பை எந்த மலிவுப் பவுடரும் தந்துட முடியாது. கலர்த் துணிகளோட பளபளப்பை ஸர்ஃப் மாதிரி எதுவுமே காப்பாத்தாது. என்னமா வெளுக்குது ஸர்ஃப், எங்க வீட்டுத் துணிகள் ஒண்ணொண்ணையும் புதுசுபோல சோபிக்க வைக்குது சலவைக்கு சலவை."

**நியாயம் இருக்கு நீங்க சொல்றதுலே...**

"சொல்ல இன்னும் எவ்வளவோ இருக்கு. கடூரமான மலிவு பவுடருங்க சருமத்துக்கே கேடு. ஸர்ஃப் அப்படி இல்லை, அலசற என் கைகளைத் துளிக்கூட பாதிக்காத சுகமான பவுடர். அனுபவத்துலே சொல்றேன்."

**புரியுது, நல்ல மதிப்புன்னு நீங்க எதைக் கண்டு வாங்கறீங்கன்னு தெரியுது...!**

"ஆமா! சொல்ப ரூபாய்களை மிச்சம் புடிக்கறதுக்காக மாசாமாசம் இவ்வளவு அனுகூலங்களையும் கோட்டைவிட நான் தயாராயில்லை. கஞ்சத்தனமா சில்லறை சேர்க்கறதுக்கும் செழிப்பா குடுத்தனம் நடத்தறதுக்கும் வித்தியாசம் என்ன, கொஞ்சநஞ்சமா!"




**எடைபோட்டு மதிப்பிட்டால் புரியும்: ஸர்ஃப் வாங்குவதே புத்திசாலித்தனம்.**

LINTAS SU 320 20 25 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

## சைலே...ன்ஸ்

சென்னையை அடுத்த முகலிவாக்கத்தில் ராஜகோபுரம் படத்தின் படப்பிடிப்பு. க்ளைமாக்ஸ் காட்சியாம். அது என்னவாயிருந்தால் நமக்கென்ன என்று பார்வையை வேறு புறமாய்ச் சுழற்றினேன்.

ஓரத்து மரத்தடியில் நளினி. ஆடும் நாற்காலியில் ஆடாமல் உட்கார்ந்திருந்தார். பேச்சு கொடுத்தேன்.

இதே படத்தின் முதல் நாள் படப்பிடிப்பில் கிணற்றிலே தொங்குகிற மாதிரி ஒரு காட்சியாம்.

''அதுவோ நிஜக் கிணறு. தொங்கிக் கொண்டிருக்கும் போது, முகம் திருப்பிக் கீழே பார்த்தேன். அவ்வளவுதான். பயத்தில் கைப்பிடி நழுவ — தொபுக்கடீர்! தண்ணீரில் விழுந்து தத்தளித்து, இரண்டு மிடறு நீரையும் குடித்துவிட்ட க்ளைமாக்ஸ் பொஸிஷனில் பாண்டியனும் மற்றவர்களும் உள்ளே இறங்கி என்னை வெளியே தூக்கி வந்தார்கள்.

முதலுதவி அளித்த பின்னும் எனக்குக் கைகால்கள் நடுங்கிக் கொண்டே இருந்தன. மறுநாள் அம்மாவுக்கு விஷயம் தெரிந்து ஓ...வென்று கதறி விட்டார்கள். கதை சொல்வதற்காக வீட்டுக்கு வந்த டைரக்டர் தேவராஜ், கதையை விட்டுவிட்டு எனக்கு ஆறுதல் சொல்லிவிட்டுப் போனார்''என்றார்.

இரண்டு வாரத்திற்கு முன், ஒரு விழாவில் கலந்து கொள்வதற்காக நான்கைந்து மாணவிகள் நளினியை அழைக்க வந்திருந்தார்களாம்.

''அந்த மாணவிகளை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கிறதே என்று யோசித்தேன். அப்புறம் தான் நினைவுக்குவந்தது —அவர்கள் எல்லோரும் ஆறு வருடத்திற்கு முன் என்னோடு 'ஆறாம் கிளாஸ்' படித்தவர்கள். நான் சொன்ன பிறகு தான் அவர்களே என்னை அடையாளம் கண்டு கொண்டு 'அடேடே... அந்த ராணியா நீ?' என்று கட்டிப் பிடித்துக் கொண்டார்கள்''என்றார் முன்னாள் ராணி!

## இந்திக்குப் போகிற இன்னொருவர்:

பிரசாத் ஸ்டுடியோ. ஒரு அழுக்குக் கலர் சொக்காயில் மணிவண்ணன். ஜனகராஜையும், செந்திலையும் வைத்து ஒரு காமெடி சீன் பண்ணிக் கொண்டிருந்தார்.



✖ மணிவண்ணன்



✖ சரளா

செந்தில் அடித்த ஒரு பஞ்ச்சிங் டயலாக்கிற்கு யாருமே சிரிக்காததால், செந்திலே சிரித்துக் கொண்டார்.

இடைவேளையில் மணிவண்ணனைப்பிடித்தேன். அவரது புதிய படங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த போது, ''24 மணி நேரம் படம் ஒரு மாதிரியாக இருந்தாலும் ரெவின்யூ பாயிண்ட்டில் ஓ.கே!'' என்றார்.

மணிவண்ணனின் ஆஸ்தான ஹீரோ மோகன் தான் என்று அலுத்துக் கொண்டவர்களுக்கு ஒரு நற்செய்தி: அடுத்து விஜயகாந்த்தை வைத்து மூன்று படங்கள் இயக்கப் போகிறார்.

இவர் இந்திக்குப் போவதாக வந்த செய்தி உண்மைதானும். நூறாவது நாள் படத்தை அங்கே ஏற்றுமதி செய்கிறார். நம்மூர் சத்யராஜையும் இளவரசியையும் கூட இந்திக்குக் கொண்டு போகிறாராம். நூறாவது நாளில் நடித்த மோகனும் விஜயகாந்தும் இந்திக்கு லாயக்கில்லையோ...?

## "நான் ஒரு தவப்புதல்வன்!"

ஏ. வி. எம். கம்ப்யூட்டர் டப்பிங் தியேட்டர். திரையில், பல்லை இளித்துக் கொண்டிருந்த தியாகராஜனுக்கு (டப்பிங்

# அந்த ராணியா நீ?

கொடுக்காத சிரிப்பாம்.) எதிரே உட்கார்ந்திருந்த நிஜ தியாகராஜன் 'ஹிஹிஹி...' என்று குரல் கொடுத்துக் கொண்டிருந்தார்.

எரிமலை படத்தில் இரட்டை வேடமாம். இரண்டாவது வேடத்தை வித்தியாசப்படுத்திக் காட்டுவதற்காகத் தனது பழைய பஞ்சாபி தாடியை மாற்றி, குறுந்தாடியாக வைத்திருந்தார்.

''நான் வரம் வாங்கிப் பெற்ற பிள்ளை. திருவாரூர் தியாகராஜ சுவாமிக்கு வேண்டுதல் இருந்து என்னைப் பெற்றார்கள். அதனால் தான் எனக்கு தியாகராஜன் என்று பெயர் வைத்தார்கள். ஆனாலும் இன்னும் அந்த ஊர் கோவிலுக்குப் போக சந்தர்ப்பம் கிடைக்கவில்லை'' என்றார், தவப்புதல்வன்!

## பாண்டியனின் உண்மைப் பெயர்!

பரத நாட்டியத்தைப் பற்றி அரிச்சுவடி கூடத் தெரியாது என்கிற தகுதி அடிப்படையில், ஒரு பரதநாட்டிய அரங்கேற்ற விழாவில் போய்ச் சிறப்புரை ஆற்றி விட்டு வந்திருக்கிறார், பாண்டியன். இவர் பெயர் பாண்டிக் கண்ணனாம்.

பாரதிராஜா தெலுங்கில் ரீமேக் செய்யப் போகும் 'புதுமைப் பெண்' படத்தில் பாண்டியன் தான் ஹீரோ! தமிழ் ஒரு, தெலுங்கிலும் குருவாகிறார்.

''தமிழ் நாடளவில் எனக்கு சுமார் 300 ரசிகர் மன்றங்கள் இருக்கின்றன(!)'' என்கிறார் பாண்டியன். புள்ளி விவரம் சரியாக இருக்குமா...?

## நம்பியாரின் பொழுதுபோக்கு:

''காலை நான்கு மணிக்கெல்லாம் எழுந்து, பீச் ரோடில் இரண்டு கிலோ மீட்டர் வாக் போவேன். முன்பு காலை வேளைகளில் டென்னிஸ் விளையாடிக்கொண்டிருந்தேன். இப்போது அதை விட்டுவிட்டேன்'' என்றார் நம்பியார். ஏன் என்று நானும் கேட்கவில்லை. அவரும் சொல்லவில்லை.

''படப்பிடிப்பு இல்லாத வேளைகளில் பேசாமல் வீட்டிலேயே தான் இருப்பேன். வெளியுறவு வேலைகள் எதுவும் வைத்துக் கொள்வதில்லை. ஏதேனும் விழாவிற்குத் தலைமை, முன்னிலை என்று கூப்பிட்டால்கூட ஒத்துக் கொள்வதில்லை. அதெல்லாம் அறிவாளிகள் செய்ய வேண்டிய வேலை என்று ஒதுங்கி விடுவேன்'' என்றார்.

முன்பு பார்க்காமல் விடுபட்டுப் போன பழைய படங்களை எல்லாம் வீடியோ கேஸட்டுகளாக வாங்கி, போட்டுப் பார்த்துக் கொண்டிருக்கிறாராம். ''அது தான் இப்போதைக்கு எனக்குப் பொழுது போக்கு!'' என்றார்.

## டிஸ்கோ எதற்கு?

முந்தானை முடிச்சில் அறிமுகமான சரளா அதற்குள்ளாக முன்னணி காமெடி நடிகர்கள் எல்லோருக்கும் ஜோடியாக நடித்துவிட்டாராம். தம்பிக்கு எந்த ஊரில் ஜனகராஜுடனும், வைதேகி காத்திருந்தாளில் கவுண்டமணியுடனும், நடித்திருக்கிறார். நான் அவரைச் சந்தித்த போது 'அம்பிகை நேரில் வந்தாள்' படப்பிடிப்பில் வி. கே. ராமசாமியுடன் (வழக்கம் போல் மனைவி ரோலில்) நடித்துக் கொண்டிருந்தார்.

பாக்யராஜுக்குப் பக்கத்து ஊராம். அந்த குவாலிபிகேஷனில்தான் முந்தானை முடிச்சில் இடம் கிடைத்ததாம்.

நடிகர் ராஜ்கமலிடம் டிஸ்கோ டான்ஸ் கற்றுக் கொண்டிருப்பதாகச் சொன்னார். காமெடி நடிகைக்கு டிஸ்கோ எதற்கு?...

—சம்பத்ஜி

✖ நளினி






# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு குணா

## கூந்தல் தைலம்

தலை மயிர் உதிர்தல், செம்பட்டை நிறம்.
பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும்.
தினசரி தலைக்குத் தேய்த்து வந்தால் தலை மயிர்
நீண்டு கறுத்து அடர்த்தியாய் வாரும். தலை அரிப்பு
மண்டையில் சொறிந்தால் செதில் உரிதல்
குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும்
விரும்பி உபயோகிக்கின்றனர்
1 பாட்டில் விலை ரூ 16-25 V.P.P. உண்டு
தபால் செலவு இல்லை.

தேவைக்கு எழுதவும் **நவசக்தி வைத்தியசாலை**
**தபால் பெட்டி எண் 7 சேலம் 636 001**

---

*எமது தைலம் கிடைக்குமிடங்கள்:* 1. சேலம் – ரோக மெடிக்கல்ஸ். 2. ஆத்தூர் – முத்து மெடிக்கல்ஸ், 3. நாமக்கல் – கஸ்தூரியா மெடிக்கல்ஸ். 4. ராசிபுரம் – ராசி மெடிக்கல் ஸ்டோர்ஸ், 5. மேட்டூர் – ஜெயலஷ்மி மெடிக்கல்ஸ், 6. திருச்செங்கோடு – சீனிவாசா மெடிக்கல்ஸ், 7. தர்மபுரி – விஜயலஷ்மி மெடிக்கல்ஸ் 8. கிருஷ்ணகிரி – கோபாலகிருஷ்ணா மெடிக்கல்ஸ் 9. ஒசூர் – மூர்த்தி மெடிக்கல்ஸ் 10. பெங்களூர் – பிரசாத் ஸ்டோர்ஸ் K.G. சர்கிள். 11. சென்னை-3 – ஹேமா மெடிக்கல்ஸ். 12. அமிஞ்சிகரை – வேலவன் மெடிக்கல்ஸ் 13. குடியாத்தம் – திருமகள் மெடிக்கல்ஸ். 14. காஞ்சிபுரம் – லஷ்மி மெடிக்கல்ஸ். 15. அரக்கோணம் – அகிலாம்பிகை மெடிக்கல்ஸ். 16. ஆரணி – பாக்கியம் அண்ட் கோ., மருந்துகடை. 17. திருவண்ணாமலை – அன்னை மெடிக்கல்ஸ். 18. வேலூர் (NA) – பாரத் மெடிக்கல்ஸ். 19. திருப்பத்தூர் (NA) – லஷ்மி மெடிக்கல்ஸ் 20. விழுப்புரம் – அன்பு மெடிக்கல்ஸ் 21 கள்ளக்குறிச்சி – A. ராஜீ நாட்டு மருந்துக்கடை. 22. கும்பகோணம் – செல்வம் மெடிக்கல்ஸ். 23. தஞ்சாவூர் – சிட்டி மெடிக்கல்ஸ். 24. திருச்சி – சண்முகா மெடிக்கல் ஹால் 25. திண்டுக்கல் தமிழ்நாடு சித்த மருந்துக்கடை 26. பெரியகுளம் – N. லஷ்மணன் மருந்துக்கடை. 27. தேனி – ஆண்டாள் மெடிக்கல்ஸ் – 28. மதுரை – குமார் மெடிக்கல்ஸ். 29. மதுரை – ஸ்டேட் மெடிக்கல் கார்பரேசன் (24 மணி நேர கடை). 30. ராமநாதபுரம் – பாத்மா மெடிக்கல்ஸ். 31. காரைக்குடி – மலேசியா ஜெனரல் ஸ்டோர்ஸ். 32. விருதுநகர் – S.S.K. மெடிக்கல்ஸ். 33 தூத்துக்குடி – அன்பு மெடிக்கல்ஸ். 34. திருநெல்வேலி – கோமதி மெடிக்கல்ஸ். 35. பாளையங்கோட்டை – ஒலிவா இந்தியன் மெடிக்கல்ஸ் 36. நாகர்கோவில் – S. நல்ல பெருமாள் மருந்துக்கடை. 37. தென்காசி – M.R. மெடிக்கல்ஸ். 38. ராஜபாளையம் – அரவிந்த் மெடிக்கல்ஸ். 39. சிவகாசி – சிவகாசி மெடிக்கல்ஸ். 40. கோவில்பட்டி – சாந்தி மெடிக்கல்ஸ் – 41. ஸ்ரீ வில்லிபுத்தூர் – பாலாஜி மெடிக்கல்ஸ். 42. உடுமலை – ஜாம் ஜாம் மெடிக்கல்ஸ் 43. பொள்ளாச்சி – ராமநாதன் மெடிக்கல்ஸ் 44. கோவை – காசிநாத் அண்ட் கோ., 45. கோவை – திருமலை மெடிக்கல்ஸ் காந்திபுரம் 46. திருப்பூர் – கீதா மெடிக்கல்ஸ். 47. அவினாசி – அவினாசி மெடிக்கல்ஸ் 48. கோபி – வாணி பார்மஸி 49. ஈரோடு – ஸ்ரீ ராகவேந்திரசாமி மெடிககல்ஸ் 50. திருச்சி ஜங் – சுபாஸ்ரீ மெடிக்கல்ஸ் 51. புதுக்கோட்டை – மீனா பார்மஸி 52. திருவாரூர் – அன்னபூர்ணா மெடிக்கல்ஸ் 53. மாயவரம் – ஸ்வாமி மெடிக்கல்ஸ். 54. சிதம்பரம் – ராஜா பார்மஸி 55. விருத்தாசலம் – ஜெயா பார்மஸி 56. சேலம் செவ்வாய்பேட்டை – பிரபாத் மெடிக்கல்ஸ் 57. தொட்டியம் – மீனாக்ஷி மெடிக்கல்ஸ் 58. கிருஷ்ணகிரி - பி. கே. பி. எம். ஜி. மெடிக்கல்ஸ் 59. கரூர் - அண்ணாமலை மெடிக்கல்ஸ்

---

எமது இதர சித்த ஆயுர்வேத தயாரிப்புகளான நவரத்ன கல்பலேகியம், சில்வர் பில்ஸ், வாயுசூர், குணா மலசுத்தி சூரணம், நெல்லிக்காய் லேகியம் etc. எமது ஸ்டாக்கிஸ்ட்டுகளிடம் மற்றும் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

# அதிக பட்ச விலை

சுமங்கலி

கான்கிரீட் கலவையை உருவாக்கும் சப்தம் இரைச்சலான சங்கீதமாகக் காதை அடைத்து மனத்தைக் கூச வைத்துக் கொண்டிருந்தது.

கலப்படமான காற்று தங்கு தடையின்றி மனித உடம்பில் இறங்கிக் கொண்டிருந்தது. ஆங்காங்கே தலையில் கம்மாடு கட்டிய பெண்டிர் சிலர் ஒரே சீராகக் கல்லை உடைத்துக் கொண்டிருந்தனர். அந்த லாகவம் ஒரு கைவந்த, கண்கூடாகப் பார்த்து வியக்கும் கலையாக இருந்தது. இருந்த போதிலும் அதை ரசிக்கும் மனப்பக்குவம் அந்த மேஸ்திரிக்கோ... இல்லை. சுற்றியிருந்த சித்தாள்களுக்கோ இல்லை.

நிமிராகப் புடைத்திருந்த இளமை அவர்களைத் தினவெடுக்க வைத்துக்கொண்டிருந்தது. இவர்கள் இப்படித்தான் ...என்பதை உணர்ந்து கொண்டவளாய்க் கல்லை உடைத்துக் கொண்டிருந்தாள் அஞ்சலை. என் கவனமெல்லாம் பணம் சேர்ப்பது ஒன்றில் தான் என்பது போல் அவளுடன் ஜோடியாக கல்உடைத்துக் கொண்டிருந்தான் சின்னான்.

''அஞ்சலையைப் பரிசம் போட, இன்னும் எத்தனை கல் உடைக்கணுமோ?' என்ற ஒரு எண்ணம் தான் அவனுக்கு.

''ஏ! புள்ள... உங்கப்பன் எப்படி இருக்குது. வர்ற தையில பரிசம் போட்டாப் போடு. இல்லாங்காட்டி கம்முனு விலகிப் போயிடுன்னுச்சி... என்ன தென்னாட்டுப் பேசித்து .தெரியுமா புள்ள! உங்கப்பன்னு பார்த்தேன். இல்லாங்காட்டி இளநீ சீவுறப் பல சீவிடுவேன் சீவி. சின்னான் கம்பங் கொல்லை காட்டான் தெரிஞ்சுக்க...!''

''போ மச்சான்! அது பேச்சு ஒரு பேச்சா... உன்ன தண்ணி போறு ஒரு பேச்சு மச்சான்! இந்த வாரம் கூலி வாங்கின அதுல ரூபாய் முப்பது தாரேன். எரவாணத்திலே செருகி .வச்ச பணம் அம்பதும் சேர்ந்தா என்பது தேறும் மச்சான். சமாளிச்சுப் போடலாம்!'' அஞ்சலை அவனைத் தேற்றினாள்.

அவர்கள் தன்னை மறந்து பேசிக்கொண்டிருந்த அந்த நேரத்தில்... எந்த லயிப்பும் இல்லாமல், எந்த பாதிப்பும் அடையாமல் தொஞ்சம் தள்ளி உட்கார்ந்து கொண்டிருந்தான் பப்புலு. அவர்களுக்கும் பப்புலுவுக்





கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. அவர்கள் யார் என்றே பப்புலுவுக்குத் தெரியாது.

பாம்பே டையிங்கில் சின்னச் சின்ன பூப் போட்ட நீல பாவாடை. அதேநீலத்தில் கேம்பிரிக்கில் சொக்காய். இழைய வாரிப் பின்னப்பட்ட பின்னல். நெற்றியில் வட்ட மான பொட்டு. தலையில் பூ. காதில் சின்ன ரோஜாவாகப் பூத்த பவுன் கம்மல்.

இத்தனை பாந்தமான அலங்காரத்துக்கும், எனக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை என்ற வெறுமையான விழிகள்.

அந்த வெறுமையான கழற்சியில் மிதந்த சூன்யத்தனம். லேசாக 'ஜொள்' ஒழுகிக் கொண்டிருந்த உதடுகள்.

வாய் ஊமையானால், மொழி செத்தாலும் விழிபேசி சடுகட்டி விடுகிறது. ஆனால்... பேசும் விழிகள் ஊமையானால்...

இவர்களையே பார்த்துக் கொண்டிருந்தது பப்புலு. அவர்கள் வேலை முடித்து கிளம்பும் வரை அதுவும் அசையவில்லை. அழவில்லை; எங்கெல்லாமோ அலைந்து நடந்து வந்த சின்னக் கால்கள் வலித்தது போலும். உட்கார்ந்து விட்டது.

அஞ்சலையும் கிளம்பி விடவே... தன் போக்கில் வேலை செய்து கொண்டிருந்த சின்னனும் வேலை முடித்த கையோடு கிளம்பினான். அவன் அந்தப் பாப்பாவை மறந்தே விட்டிருந்தான். அஞ்சலையின் நினைவுதான் நிழலாக அவனைத் தொடர்ந்து கொண்டிருந்ததே...

அவனைப் பின் தொடர்ந்து வந்துகொண்டிருந்தது பப்புலு.

பத்து வயதின் வளர்ச்சி உடம்பில் மட்டும் தான். பப்புலு சின்ன பெண்ணாகப் பாவாடை சட்டையில் அழகாகத்தான் இருந்தது. ஆனால் மனசுதான் ஆறு மாதக் குழந்தை யின் வளர்ச்சியைக் கூட அடையவில்லை.

சின்னனைப் பின் தொடர்ந்த பப்புலு அவனோடு வீட்டினுள் நுழைந்து விட்டது.

சட்டென்று விழித்துக் கொண்டான் சின்னன்!

''யாருடா... இந்தப் பாப்பா உன்னோடு வந்திருக்கு?'' அன்னம்மா மகனைப்பார்த்து அதிசயமாகக் கேட்டாள்.

பப்புலு சிநேகமாகச் சிரித்தாள்.

அந்தச் சிரிப்பு அவனைக் கட்டிப்போட்டு விட்டது.

''என்னு!... இந்தப் பாப்பா கம்மாச் கம்மா சிரிக்குது...?''

பக்கத்தில் வந்த அன்னம்மா... மெல்ல அந்தப் பெண்ணிடம் பேசலானாள்.

''உன் பேர் என்ன ஆத்தா?''

அதற்குப் பதில் சொல்லத் தெரிந்தால் தானே பேர் சொல்லும்?

பப்புலுவைப் பார்க்கப் பாவமாக இருந் தது சின்னனுக்கு.

போட்டுக் கொண்டிருந்த துணி, காதில் இருந்த கம்மல் எல்லாமே இது பணக்கார வீட்டுப் பாப்பாதான்னு பறை சாற்றியது.

பாவம், வழி தெரியாமல் வந்துவிட்டது என்று புரிந்து கொண்டாள் அன்னம்மா.

அதற்கு அழகாகச் சாப்பிடக் கூடத் தெரியவில்லை. முகமெல்லாம் அப்பிக்கொள் ளவே தானே அதற்கு ஊட்டி விட்டாள் சின்னன்.

அதுவும் படுத்தாமல் சாப்பிட்டது. வாயைத் துடைத்த வேளையில் கண்ணைத் தூக்கம் அழுத்த அப்படியே படுத்துக் கொண்டு விட்டது பப்புலு.

இருப்பதற்குள் நல்ல புடவையைப் போர்வையாகப் போர்த்தி விட்டாள் அன்னம்மா.

''சின்னன்! பொழுது விடிஞ்சவுடனே புள்ளையை இட்டுட்டுப் போலீஸ் ஸ்டேஷனில் விட்டு வந்துடு. பெத்தவங்க தவிச்சிக்கிட் டிருப்பாங்க. ஒரு ராத்திரி வச்சு காபந்து பண்ணினது போதும். பொல்லாப்பு வந்து சேரப் போவுது. பத்திரமா இன்ஸ்பெக்டர் ஐயாகிட்ட சேர்த்துப்போடு!''

முதல் நாள் மாலை முழுவதும் தேடி அலுத்து... இரவெல்லாம்... 'பப்புலு... பப்புலு...' என்று புலம்பிக் கொண்டிருந் தாள் பார்வதி.

விடிந்ததும், விடியாததுமாக...

ராஜன், பாலன் எல்லாம் ஆளுக்கு ஒரு பக்கமாகத் தேடப் போய் விட்டிருந்தனர்.

பெரிய பெண் மாலதியும் உஷாவும், தங்களுக்குத் தெரிந்த இடங்களில் போய் விசாரிக்கலாயினர்.

கடைசி பெண் பப்புலுதான் அந்த வீட்டில் எல்லோருக்கும் செல்லம். அவள் பிறக்க விட்டுத்தான் அதிர்ஷ்டம் அவர்களை முழுதாக அணைக்கத் தொடங்கியிருந்தது.

ரொம்ப ரொம்பச் சாதாரணமாக இருந்த பாலகிருஷ்ணன் சுயமாக காலை ஊன்றி நிற்க ஆரம்பித்திருந்தார். எம். எல். ஏ. ஆனார்

---

இந்தியாவிலேயே அதிக தூரம்ஓடும் ரயில் எது தெரியுமா திருவனந்தபுரத்தி லிருந்து வடகிழக்கே கௌஹாத்தி நகருக்குச் செல்லும் 901–902 கௌ ஹாத்தி எக்ஸ்பிரஸ் ரயில்தான். இது திருவனந்தபுரத்திலிருந்துபிரதிவியாழக் கிழமை பகல் 2.00 மணிக்குப் புறப் பட்டு சுமார் 3600 கிலோ மீட்டர் தூரம் சென்று ஞாயிற்றுக்கிழமை பகல் 2.00 மணிக்கு கௌஹாத்தி போய்ச் சேருகிறது சரியாக. 72 மணி நேரம். அதேபோல் திரும்பி வரவும் மூன்று நாட்கள்.

—ரமணி.



பாங்க் பாலன்ஸில் முழு நம்பர்களுடன் பூஜ்யங்கள் சேர்ந்து உறவாட ஆரம்பித்து ஓட்டு வீடு மச்சு வீடாகி மாடி வீடாக நிமிர்ந்தது.

''யாரடா அங்கே, முத்தையா ஓடியா... அவர் சைக்கிள் எடுத்து பத்து இருபது ஆளை அங்கங்கே அனுப்பு... ஓடு... குழந்தை எங்கிட்டு நிக்கறுனோ... பேசத் தெரியாத புள்ளை... எந்த பாவியாவது புள்ளையைக் கடத்திக்கிட்டுப் போயி வியாபாரம் செய்துடு வாங்களோ!'' என்று புலம்பினர் பால கிருஷ்ணன்.

**ப**க்கத்து குடிசை வேலு கிட்ட சைக்கிள் வாங்கி வந்த சின்னான்... பப்புதுவை உட்காரவைத்துத் தள்ளிக் கொண்டே போக லாஞன்...

கோடம்பாக்கம் போலீஸ் நிலையத்தைக் குறி வைத்து மெல்லச் சென்று கொண்டிருந் தான் அவன்.

''யோவ் சின்னான்! நல்லாயிருக்கியா துரை... உங்க அப்பன் எப்படி இருக்குது. அன்னம்மா நல்லாயிருக்குதா...? எப்பக் கண்ணாலம் வைக்கப் போறே...?''

அவனைச் சந்தித்த ராசம்மா அத்தை உரத்த குரலில் அவனைக் குசலம் விசாரிக்க லாஞன். சட்டென்று அவன் பார்வை பப்புது மேல் விழுந்தது!

''சின்னான் புள்ள... இந்தக் குட்டியை எங்கன இட்டுக்கினு போற... இது எம். எல். ஏ. ஐயா ஊட்டுப் புள்ளயாச்சே! அங்கிட்டு இந்தப் புள்ளையை காணுமல் துடிச்சிட்டிருக்குதுங்க. நானு அவுக ஊட்டுப் பக்கத்துப் பங்களாவுல தான் வேலை பாக்குறேன்!''

ராசம்மா அத்தைக்கு எப்பவுமே மெதுவாகப் பேசத் தெரியாது. கபடு, சூதில்லாதவள். நல்லவள்.

''அத்தை இது நேத்து சாயந்திரத்துக்கு மேலே பொழுது சாய்ந்திட்டிருக்கறப்ப நம்ப வீட்டுக்கு வந்திடிச்சு. வேலை முடிஞ்சு நான் வர்றப்ப இதுவும் கூடவே வந்திடுச்சு. அதுக்கு ஒண்ணுமே சொல்லத் தெரியலே. விவரம் சொல்லிப் போலீஸ் ஸ்டேஷனிலே விட்டுட்டு வரலாம்னு போறேன்!''

''வேண்டாம், எம். எல். ஏ. வீட்டுக்குப் போகலாம்!'' என்றாள் அத்தை.

பரபரத்துக் கொண்டிருந்த அந்தப் பங்களாவின் கேட்டைத் தாண்டியதும் அடித்துப் பிடுங்கிக் கொண்டு அத்தனை பேரும் ஓடி வந்தனர்.

''பப்புது கண்ணு... வந்துட்டியா!'' பார்வதி ஓடிவந்து மகளைத் தூக்கிக் கொண் டாள்.

பாலகிருஷ்ணனில் நிறைந்த சந்தோஷம் வெளியே வரத் தெரியாமல் அலைமோதியது.

அண்ணன், அக்காள் என உறவின் பந் தங்கள் ஓடி வந்து அணைத்துக் கொண்டன.

''என்னம்மா நீங்க... தம்பி, புள்ளையை இட்டுக்குன்னு போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிட்டிருந்திச்சு... புடிச்சு இட்டாந் தேன். தம்பியை யாருணுச்சும் கவனிச்சீங் களா?''

சட்டென்று நினைவுக்குத் திரும்பிய பால கிருஷ்ணன், மனம் நிறைந்த சந்தோஷத் துடன் ''தம்பிக்கு ரொம்ப ... நன்றிங்க...!'' என்றார். அவர் கை குவிந்து வணங்கியது.

''உஷா... சமையல்காரரை இரண்டு காபி கொண்டு வரச் சொல்!''

நுரை பொங்கும் காபி கொஞ்ச நிமிடங் களில் அவன் முன் நீண்டது. கடகட அதைக் குடித்து முடித்த சின்னான்...விடை பெற்றுக் கொள்ளும் போது அவனை யாருமே சீண்டவில்லை.

கருவேப்பிலைக் கொத்து கதைதான்.

**வீ**ட்டுக்குத் திரும்பியவன் ஆத்தா கொடுத்த கேழ்வரகுக் கஞ்சியை வயிறு முட்டக் குடித்தான்.

'தைக்குள் பரிசப் பணம் சேர்க்கணுமே'. அவன் கவலை அவனுக்கு கையில் குடத் துடன் குடிசை வாசலில் சந்தித்த அஞ்சலை யைப் பார்த்ததும் ஆத்திரம் நிரக்கொட்டி அழுதான்.

''புள்ள... அந்த ஆளுக்கு என்னு நீச மனசு பாரு... காப்பி கொடுத்து அனுப்பிச் சுட்டான்.''

''யோவ் மச்சான். வெறுமே இடலே. ஆவன்ட்ட நீ வியாபாரமா செய்த? துட்டு துட்டுனு அலையறே. அவன் கொடுத்த காசுல நீ எனக்குப் பரிசம் போட்டுப் பட்டுப் புடவை எடுக்க வேண்டாம்! ஒரு நூல் சேலை போதும். இந்தா. எரவாணத்திலே அப்ப னுக்குத் தெரியாமல் சேர்த்துவைச்ச துட்டு!''

கசங்கியும், மடிந்தும் சில்லறையுமாக... அவன் கையில் காசை அள்ளிக் கொடுத்தாள் அஞ்சலை.

---

கல்கத்தாவில் அண்மையில் ஒரு புதுமையான சாவுச் சடங்கு நடத்தி ஞர்கள்.

ஒரு டெலிபோன் கருவி படத்திற்கு மாலையிட்டு புஷ்பம், பழம் முதலியவை கொண்டு பிரார்த்த நிகழ்ச்சியை நாள் பூராவும் நடத்திஞர்கள். பலருக்கும் இந்த நிகழ்ச்சிக்கு அழைப்பு அனுப்பி ஞர்கள். இறந்தவர்கள் வீட்டில் பாடப்படும் ''கீர்த்தனை'' ''காஸட்டை'' வைத்தார்கள். லஞ்ச ஊழல் என்ற வியாதி காரணமாக கல்கத்தா டெலி போன் இறந்து விட்டது என வந்திருந் தவர்களுக்கு அறிவித்தார்கள். இதைக் காண எக்கச்சக்கக் கூட்டம்

ஆதாரம்: ஸ்டேட்ஸ்மன்.

எஸ். குப்புசுவாமி



# மெட்ராஸ் போறேம்மா!

## ஜானகி மணாளன்

என்னோட அக்கா மெட்ராஸ்ல இருக்கா. அவ இன்னிக்கு வரப்போறாளாம். அம்மா சொன்னாங்க...

நான் அவளைப் பார்த்ததே இல்லை. நான் பிறக்கிறதுக்கு முன்னாடியே, அம்மா அவளை மெட்ராசுக்கு அனுப்பிட்டாங்க...

அவ கருப்பா, செவப்பான்னு கூட எனக்குத் தெரியாது. ''எப்படிம்மா இருப்பா'ன்னு கேட்பேன். 'எல்லாம் உன்னைப் மாதிரித்தான்டி' அப்படிம்பாங்க.

அதனால என்னைக் கண்ணாடியில பார்த்துப்பேன். அப்போ அக்காவைப் பார்க்கிறதா நினைச்சுப்பேன்.

நான் நல்ல செவப்பு. என்னோட அழகுக்கு நல்லா இழைய வாரிப் பின்னி, ரெட்டை ஜடை போட்டு, ரெண்டையும் முன்னால எடுத்து விட்டு, தலை நிறையப் பூ வைத்துப் பார்த்தால், அழகு கொள்ளை போகும். ஆனா, நான் தலையை அள்ளித்தான் முடிஞ்சுகட்டு இருக்கேன்.

ஏன்னா, எனக்குச் சீவிச் சிங்காரிச்சு விட்டுக்கிட்டு இருக்க, எங்கம்மாவுக்கு நேர மில்லை. சதா வேலை தான். விடியக்காலையில எழுந்து போவாங்க. திரும்பி வரப் பகல் ஒண்ணோ, ரெண்டோ தான். அது வரைக்கும் வீட்டுக்கு எஜமானி நான் தான்.

வீடுன்னா, அப்படி ஒண்ணும் பெரிசு இல்லை. சின்னக் குச்சு. எலிவளை. ஆனா தனி வளை. வாடகை வீடுதான். ரெண்டு மாசமா அதைக் கூடச் சரியா கொடுக்கல்லே... வீட்டுக்காரர் வந்து தினம் சத்தம் போடறார்.

எங்கப்பா இதிலெல்லாம் பட்டுக்க மாட்டார். எப்போ வீட்டுக்கு வருவார். போவார்ன்னு சொல்ல முடியாது. ஏதாவது கிடைச்சாக்க கொண்டு வந்து கொடுப்பார். அம்மா அதைச் செலவு செய்ய மாட்டாங்க... தபாலாபீஸ் சேமிப்புக்கணக்குல போட்டுடுவாங்க. என் கிட்ட தான் கொடுத்துக் 'கொண்டு போய்ப் போடுடீ'ம்பாங்க.

'ஏன்ம்மா நம்ப பணத்தை அங்கக் கொண்டு போடறே'ம்பேன். 'எல்லாம் பின்னால மொத்தமா வரும்டீ, வட்டியோட'ம்பாங்க. அம்மா இப்படி வயித்தை ஒடுக்கி வாயைக் கட்டி ஏன் பணம் சேர்க்கி றாங்க தெரியுமா? இப்போ வரப் போறாளே அக்கா. அவளோட கல்யாணத்துக்குத்தான்!

அதைக் கேட்கிறப்போ, 'நாளைக்கு என்னோட கல்யாணத்துக்கும் இப்படித்தானே கஷ்டப்பட்டுப் பணம் சேர்ப்பாங்க'ன்னு நினைச்சுப்பேன். 'பாவம் அம்மா'ன்னு இருக்கும்.

எனக்கு நாலு அண்ணன். எல்லோரும் பள்ளிக்கூடம் போறாங்க. காலையில எழுந்த உடனே, வீட்டுல இருக்கற பழையசோத்தைப் பிழிஞ்சு, நான்தான் போடுவேன். மத்தியானம் பள்ளிக்கூட சத்துணவுல சாப்பாடு. அவர்களைப் போலப் பள்ளிக்கூடம் போகணும், படிக்கணும், சத்துணவுல சாப்பிடணும்னு, எனக்கும் ஆசைதான். என்ன பண்றது? நானும் பள்ளிக்கூடம் போயிட்டா, வீட்டுல தம்பி தங்கைகளை யாரு பார்த்துப்பா? நான் தானே பார்த்துக் கிட்டாகணும்!

அவங்களுக்குப் போட்டது போக, சோறு மீதி இருக்கறதைத் தம்பி தங்கைகளுக்குப் போடுவேன். எனக்கு அப்புறம் ஒரு பொண்ணு. ரெண்டு பையன். ஆக எனக்குப் பின்னால் மூணு. முன்னால அஞ்சு. ஆக எங்கம்மாவுக்கு ஒன்பது குழந்தைகள். 'பாவம் அம்மா'ன்னு நினைச்சுப்பேன்.

எல்லோருக்கும் போட்டப்பறம் மீதி சோறு இருந்தா, நான் சாப்பிடுவேன். இல்லைன்னா, வயிறு ஃபுல்லாத் தண்ணியக் குடிச்சுடுவேன்.

எனக்கு அடுத்தவ தங்கை. அவளும் என்னைப் போலத்தான். எனக்கு வாரிசுன்னு சொல்லலாம்.

ஏன்னா, எங்கம்மா என்னை எங்கேயோ அனுப்பப் போறாங்களாம். அதனால தம்பிகளைப் பார்த்துக்கணுமே! அதனால அவளுக்கும் பள்ளிக்கூடம் இல்லை. படிப்பு இல்லை. சத்துணவு இல்லை.

எனக்கு இங்கேயிருந்து போகப் பிடிக்கல்லே! இருந்தாலும் எங்க அம்மா முடிவு செஞ்ச பிறகு நான் என்ன செய்ய முடியும்?

ஆச்சு! மணி பன்னிரண்டு ஆகப்போகுது. இன்னும் ஒரு மணியில அம்மா வந்துடுவாங்க.

என்னது இது? எதுத்த வீட்டு வாசல்ல கப்பல் மாதிரி ஒரு கார் வந்து நிக்குதே! 'டக்'குனு முன் கதவைத் திறந்துண்டு டிரைவர் இறங்கறாரே! பின்னாலேருந்து இறங்கறது யாரு? எதுத்த வீட்டுப் பொண்ணும் மாப்பிள்ளையுமோ? ஆமாம்! மூணு குழந்தைகளும் இறங்கறதே!

மூணும் எத்தனை அழகா இருக்கு? வெள்ளைக்காரா மாதிரி... 'டிப்'டாப்பா... அம்மா 'ஜம்'ன்னு இருக்கே!

நாம்பளும் வந்து பிறந்தோமேன்னு நினைச்சுக்கறேன்... எனக்கு மனசுல என்னவோ போல இருக்கு.

எதுத்த வீட்டுல, இவா எல்லாம் மெட்ராசுலதான் இருக்காங்க... எங்க அக்கா கூட இவங்க வீட்டுல தான் அங்க ஒத்தாசை பண்ணிக்கிட்டு இருக்காளாம்... இவங்களோட தான், இன்னிக்கு அக்காவும் வரப் போறதா அம்மா சொன்னாளே! காணுமே! உம்...?

இல்லை... இல்லை... அதோ முன் சீட்டி லேருந்து இறங்கறது யாரு? அது தான் நம்ப அக்காவோ? 'நான் பார்த்ததே இல்லை... பார்த்தா என்னை மாதிரித்தான் இருக்கா... இங்கியே பார்க்கிறாளே.... சிரிக்கிறாப்போல கூட இருக்கே... கேட்டுத் தெரிஞ்சுக்கலாம்னு, அம்மா கூட இல்லையே!

எல்லாச் சாமான்களையும் அக்கா தான் உள்ளே கொண்டு வைக்கிறா... கடைசில, கார்ல உட்கார்ந்திருக்கிற குழந்தையை, 'வா'ன்னு கைநீட்டுறாளே...! அது எத்தனை ஆசையா அவ கிட்ட தாவறது?

எல்லாரும் உள்ளே போயிட்டாங்க... டிரைவர்மட்டும் தான் இருக்கிறார். அவரும் கார் கதவை எல்லாம் சாத்திட்டு, அடுத்த வீட்டுத் திண்ணையில போய் உக்கார்றாரே!

அவரைப் பார்த்தா ஆசையா வரது. வய சானவர். அவரையே பார்த்துண்டு நிற்க றேன்... அவரும் என்னையே பார்க்கிறாரே! 'வா'ன்னு தலையாட்டிக் கூப்பிடறார். நான் ஓடறேன். 'குடிக்கக் கொஞ்சம் தண்ணி கொண்டாம்மாங்'கறார். நான் வீட்டுக்குள்ள ஓடறேன். ஒரு தம்ளரை எடுத்து சுத்தமாக் கழுவறேன். தண்ணியைக் கொண்டுகொடுக் கறேன். அவர் வாங்கிச் சாப்பிடறார். நான் பார்த்துக்கிட்டே நிற்கறேன்.

அப்போ 'தாத்தா'ன்னு கூப்பிட்டுக் கிட்டே வரா அக்கா. நான் அவளையே பார்த்துண்டு இருக்கிறேன். அவளும் என் னையே பார்க்கிறாள். என்னோட கண்ணுல நீர் தளும்பறது. உடனே அவ கண்ணுலே யும் நீர் வரது. வேறு பக்கம் திரும்பித் துடைச்சுக்கறா.

''நீ யாருடீ? உன் பேரு .என்ன?'' அப்படீங்கறா அக்கா.

நான் எல்லாத்தையும் சொல்றேன்.

''அம்மா வீட்டுல இருக்காளாடீ''ன்னு கேட்கறா. உடனே எனக்கு அம்மா நினைவு வரது. 'இன்னும் ,வரல்லே'ங்கறேன்.

எல்லாரையும் பத்தி விசாரிக்கிறா! 'நான் தான்டீ உன்னோட அக்கா'ங்கறா. 'அதான் எனக்குத் தெரியுமே'ங்கறேன்! அக்கா என்னைக் கிட்டக் கூப்பிடறா. இறுகக் கட்டிக் கறா. என்னால மூச்சு விட முடியல்லே. அத்தனை ஆசை. எனக்குப் பெருமையா இருக்கு.

'வீட்டுக்கு வாயேன்'ங்கறேன். 'இரு உள்ளே சொல்லிட்டு வரேன்'ங்கறா. உள்ளே போறா.

டிரைவர் தாத்தா, கேட்கிறார். ''நீதான் அவ தங்கையா?''

நான் 'ஆமாம்'ங்கறேன். 'நீதானே எங்க ளோடு மெட்ராசுக்கு வரப் போறே'ன்னு கேட்கிறார்.



நான் பதில் சொல்லல்லே. எனக்குள்ள யோசனே.

எங்க அக்காவுக்குக் கல்யாணம் பண்ணப் போருங்க. அதனுல, இந்தத் தடவை அவளே இங்கேயே விட்டுட்டு, பதிலுக்கு .என்னே அழைச்சுக்கிட்டுப் போகப் போருங்களாம். என் அம்மாவும் அப்பாவும் முடிவு பண்ணி யிருக்காங்க.

தாத்தா மறுபடியும் கேட்கிருர். என்ன பதில் சொல்றதுன்னே புரியலே.

அக்கா போட்டுண்டு இருக்கிற சட்டை துணிமணிகளேப் பார்க்கிறப்போ... அவ கிட்ட குழந்தைகள் பழகுகிற ஒட்டுதலேப் பார்க்கிறப்போ, அக்காவுக்குப் பதிலா மெட் ராசுக்குப் போகலாமான்னு இருக்கு.

இப்ப தாத்தா வேறு கேட்கிருர். அவ ரோட பேசிண்டே இருந்தால் தேவலே போல இருக்கு. இவருக்காகவாவது போகலா மான்னு நினேச்சுக்கறேன்.

ஒரு முடிவுக்கும் வர முடியல்லே.

அதோ அக்காவும் வந்துட்டா. என் கையைப் பிடிச்சு இழுத்துண்டு வீட்டுக்கு ஓடரு... அங்கே தம்பிகளும், தங்கையும் தூங்கிண்டு இருக்காங்க.

அக்காவோட. நல்ல துணிமணி அழுக்காய்ப் போயிடுமேன்னு என்னுடை அழுக்குப் பாவாடையாலே தரையைத் தட்டறேன். அவகிட்ட நெருங்கி, உடம்போட உடம்பா ஒட்டிக்கிட்டு உட்கார்றேன்.

கொழு கொழுன்னு அக்கா எவ்வளவு லெப்பா, அழகா இருக்கா!... எனக்கு வியப்பாக இருக்கு.'நம்ப அக்காதானு'ன்னு. என்னே என்னவெல்லாமோ கேட்கிரு... சொல்றேன். பேசிக்கிட்டு இருக்கிறேம். பொழுது போனதே தெரியல்லே.

அதோ, அம்மாவும் வந்துட்டா.

நான் எழுந்து கிட்ட ஓடிப்போய், 'அம்மா... அம்மா! அக்கா வந்துட் டாம்மா'ங்கறேன். அதை அம்மா காதுலயே வாங்கிக்கல்லே.

''வாடீ... வா! எப்போடீ வந்தே'ன்னு கேட்டுண்டே. உள்ளே வர்ரு...

ரெண்டு பேரும் உட்கார்ந்து பேசரு, பேசரு, அப்படிப் பேசரு. நடுவுல உட்கார்ந் துண்டு 'ஆ'ன்னு பார்த்துண்டு இருக்கறேன்.

அவா பேசிண்டது இதுதான். அக்கா வுக்குக் கல்யாணம் நிச்சயமாகி இருக்காம். எனக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கு. அவளுக்குப் பதிலாக என்னே மெட்ராசுக்கு அனுப்பப்போகிருளாம்.வருத்தமாகஇருக்கு.

அதோ அப்பாவும் வந்துட்டார். மறுபடி யும் எல்லோரும் ஒண்ணு உட்கார்ந்து பேசரு...

அப்புறம் அம்மா என்னேக் கேட்கருங்க...

''நீ போறயாடீ, மெட்ராசுக்கு, அக்கா வுக்குப் பதிலா?''

எனக்கு அழுகையா வரது. அம்மா சொல்ரு.

''அங்கே போனு, . வயிறு ஃபுல்லா தினம் சாப்பிடலாம்டீ! இங்கே .மாதிரிக் கூழும், கஞ்சியுமா சாப்பிட வேண்டாம்.''

நான் அக்காவை நிமிர்ந்து பார்க்கிறேன்.

'ஆமாம்டீ'ங்கருப் போல தலையை ஆட்டரு அக்கா.

அம்மா சொல்றது சரின்னு தோணறது. ஆனு, 'இங்கே அண்ணன் தம்பிகள், கஷ்டப் படறப்போ, எனக்கு மட்டும் ஏன் இதெல் லாம்...?' ன்னு நினேக்கிறேன்.

ஆனு, எனக்கு ஒண்ணு புரியறது. எல்லோருமாச் சேர்ந்து, .என்னே அனுப்பற துன்னு முடிவு பண்ணிட்டாங்க. அப்புறம் என்னேக் கேட்பானேன்?

நான் பதிலே பேசல்லே...

அப்பா சொல்ருர். ''போய்த்தானே ஆகணும்! இல்லாட்ட ஏதானேக்கு இவளுக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க நம்பகிட்டே என்ன இருக்கு? போனுல் தானே, இப்போது அக்காவுக்கு அவா பணம் போட்டுக் கல் யாணம் செய்யருப் போல, இவளுக்கும் நாளேக்குச் செய்து வைப்பா!''

என்னேப் பெத்தது இவா இரண்டுபேரும். கல்யாணம் பண்ணிக் கொடுக்க மட்டும் யாரோவாம்! அதுக்காக நான் இப்பவே அங்கே போகணுமாம். எப்படி இருக்கு நியாயம்?

''என்னடீ சொல்றே?'' அம்மா கேட் கிருங்க. மூஞ்சி என்னே அதட்டருப்போல இருக்கு.

இவங்க அதட்டலுக்கெல்லாம் நான் பயப்பட மாட்டேன். அழுவேன். அடம் பிடிப்பேன்.

ஆனுல் பிடிக்கப் போறது இல்லே. ஏன்னு, எங்க அம்மாவைப் பார்த்தால் பாவமா இருக்கு. மூஞ்சி அதட்டருப் போல இருந் தாலும் 'போடி'ன்னு என்னேப் பார்த்துக் கெஞ்சருப் போல இருக்கு.

அம்மாவுக்குப் பாரமா இருப்பானேன், என்னே அறியாமல் தலையாட்டறேன். 'நான் மெட்ராஸ் போறேன்மா'ன்னு!

---

**அப்பாடியோ!**

| | |
|---|---|
| நெய் | ரூ. 1 கோடி |
| பாதாம் இராட்சை முந்திரி, | ரூ. 50 லட்சம் |
| ஏலக்காய் | ரூ. 30 லட்சம் |
| அரிசி | ரூ. 20 லட்சம் |
| சர்க்கரை | ரூ. 50 லட்சம் |
| உளுத்தம் பருப்பு | ரூ. 50 லட்சம் |
| இதர பொருள்கள் | ரூ. 35 லட்சம் |

இது என்ன பட்டியல் என்கிறீர் களா இந்த ஆண்டு பிரசாதங்கள் செய்ய திருப்பதி — திருமலே தேவஸ் தானம் வாங்கிய பொருள்களும் அவற்றிற்கான விலேயும்தான்!

தகவல்: புதுவை நித்திலன்.

ஆதாரம்: 'ஓம் சக்தி'



# வட்டமேஜை

# மூவாயிரம் கோடி முடங்கிக்கிடக்கிறது!



● ஸ்ரீவத்ஸன் ''தாயம்மா இழவி'' மூலம் பணம் ஏற, ஏறப் பேராசை பெருக்கெடுக்கும் என்பதை உயிரோட்டமாகச் சித்திரித்திருப்பது படிப்போரின் உடம்பையும், மனத்தையும் புல்லரிக்க வைக்கிறது.
மேலகிருஷ்ணன்புதூர் —பிரபா விங்கேஷ்.

● வெள்ளி விழாக் கண்ட காத்தாடி உயர உயரப் பறக்கிறார். ''சாகிற வரை ஆக்ட் பண்றதுல தான் எனக்குத் திருப்தி'' என்கிற மனோரமாவின் சலே உள்ளத்தைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.
சென்னை—57. இரணியல் 'கலே'.

● வங்கியில் நடப்பதை அப்படியே அழகாகப் படம் பிடித்துக் காட்டி விட்டீர்கள்; நாடு போய்க் கொண்டிருக்கிற நிலைமையைப் பார்த்தால் நிச்சயமாகச் சொல்கிறேன், உண்மை அழிந்து விட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை!
சென்னை—56. டாக்டர் நாவவர் தாசன்.

● ''சுபஸ்ரீ''யின் 'கூடையில் விழாத பந்து' ஸ்போர்ட்ஸ் வுமனைப் பற்றிய சராசரி ஆணின் மனப்போக்கைத் துல்லியமாகப் படம் பிடித்துக் காட்டியது.
சென்னை—4. ஆர். கணேஷ்.

● சமுதாயத்தில் நலிந்த பிரிவினர் வங்கிக் கடனை எப்படிப் பெறுவது, யாரை அணுகுவது என்றே தெரியாத நிலையில் உள்ளனர். அதனால் தான் 'விபர'மறிந்த கட்சிக்காரர்கள் இடையிலே வருகின்றனர்! பாங்குப் பணம் ரூ. 3000 கோடி பெரிய அதிபர்களிடம் முடங்கிக் கிடக்கிறதே! அந்தப் பணம் சர்வ கட்சிகளையும் சேர்ந்த டெபாசிட்தாரர்களினுடையது தானே! எந்தக் கட்சி ஆளுகிறதோ, அதற்குத்தலையாட்டும் பண முதலைகளிடம் இப்படிப் பணம் முடங்கி விட்டிருப்பது பரவாயில்லையா?
சென்னை—61. நேசன்.

(யார் சொன்னது பரவாயில்லை என்று? பொருளாதார ரீதியான சிந்தனையின்றி ஆட்சியிலுள்ள அரசியல்வாதியின் நிர்ப்பந்தத்தின் பேரில் அராஜகமான பாங்குகள் வழங்கும் எந்தக் கடனும் நாட்டு நலனுக்கு உகந்ததல்ல. ஆசிரியர்.)

● 'லோன் மேளா'வின் ஓர் முக்கிய அங்கமாக (முக்கிய அசிங்கமாக) விளங்குவது ''வங்கி ஊழியரின் உயிர்ப் பறிப்பு'' என்ற உண்மையையும் கட்டிக் காட்டியிருக்க வேண்டும்.
சேரன்மகாதேவி. மார்க்ஸியன்.

● பொற்கோவில் வளாகத்தில் உயிர்நீத்த அமரர் குப்புசாமி அவர்களின் குடும்பத்திற்கு, கருவூலக் கணக்கு இயக்கத்தைச் சேர்ந்த நாங்கள் எமது நன்கொடையாக ரூ 30 வழங்கியுள்ளோம்.
சென்னை-35 ச. ஞானம்

● பொற்கோவில் வளாகத்தில் நாட்டின் ஒருமைப்பாட்டிற்காக உயிர்த் தியாகம் செய்த இராணுவ வீரர் திரு. எம். குப்புசாமியின் குடும்ப நல நிதியாக ரூபாய் ஐம்பத்தைந்து சேகரித்து அனுப்பியுள்ளோம். இது இந்துஸ்தான் ஸ்டீல் ஒர்க்ஸ் கன்ஸ்டிரக்ஷன் லிமிடெட் அலுவலகத்தில் வேலை செய்யும் எங்களது நன்கொடை.
விசாகப்பட்டினம்—20.
அலுவலர்கள் ஆபீஸ் ஸ்டாப் (H.S.C.L.)

(மேற்படி தொகைகள் திருமதி குப்புசாமிக்கு அனுப்பப்பட்டு விட்டன. —ஆசிரியர்.)

● பாலாறு பாழாகிறது கட்டுரை படித்தேன். காவிரியும் இந்தத் துர்பாக்ய நிலைக்கு ஆளாக்கப்பட்டு வருகிறது. பி. எச். இ. எல். போன்ற பல தொழிலகங்களிலிருந்து வரும் கழிவு நீர், மற்றும் இரசாயனப் பொருட்கள் காவிரிநதியில் விடப்படுகின்றன. இதனால் காவிரி நீரின் தூய்மை கெடுவதோடு, அதில் வசிக்கும் உயிரினங்கள் (மீன்கள் உள்பட) பெரிதும் பாதிக்கப்படுகின்றன. பாசனத்திற்காக விவசாயிகள் இந்த நீரைப் பயன்படுத்துவதினால் பயிர்களும் பாழாகின்றன. இந்த நிலை இந்தியா முழுவதிலும் உள்ளது. தொழிற்சாலை நிர்வாகிகள் தான் இதைப் பற்றிக் கவலைப்படாமல் உள்ளார்கள்; மத்திய, மாநில அரசுகளாவது கவனிக்க வேண்டாமா?
சிதம்பரம். என். விக்னேஷ்.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது.)

# நெஞ்சக் கனல்

## அத்தியாயம் 21

**கா**லிகளையும், ரௌடிகளையும் ஏவி விட்டுத் தன்னைத் தாக்கி எழுதிய அந்தப் பத்திரிகை அலுவலகத்துக்குத் தீவைக்கவும், சேதம் விளைவிக்கவும் ஏற்பாடு செய்தான் திரு. பொறுப்பில்லாமல் ஆளும் கட்சியைத் தாக்கி எழுதியதற்காக மக்களே கொதித்தெழுந்து அந்தப் பத்திரிகை அலுவலகத்தைத் தாக்கித் தீயிட்டனர் என்பதுபோல் பின்னால் திரு வகையறாவினரால் அந்த நிகழ்ச்சி வர்ணிக்கப்பட்டது. தாங்கள் எது செய்தாலும் அதை ஆதரிப்பவர்கள் மக்கள். எதிர்ப்பவர்கள் சமூக விரோதிகள் என்று சொல்வதற்கு அவன் பழக்கப்படுத்திக் கொண்டிருந்தான். ஜனநாயகம் என்பது அந்த எல்லைக்கு மேல் விரிவாக அவனுக்குப் புரியவில்லை.

அப்போது தான் பொறுப்பேற்றிருந்த அமைச்சின் இலாகா காரணமாகவும், பதவி காரணமாகவும் பல பணக்காரர்கள் தொழிலதிபர்களின் நட்பும், பழக்கமும் அவனுக்கு ஏற்பட்டன. அண்ணனை நெருங்கியும், நெருக்கியும் வசப்படுத்த முடியாத பலர் அவனைச் சுற்றிச் சூழ்ந்தனர். நாளடைவில் அவன் அவர்களுடைய நெருங்கிய நண்பனாகி விட்டான்.

அவர்களில் தாண்டவராயன் என்கிற உருக்கு ஆலை அதிபர் ஒருவர் தாம் அவனுக்கு அளித்த விருந்து ஒன்றிற்குப் பின் இரவு அகாலத்தில் ஓர் அழகிய ஆங்கிலோ இந்திய யுவதியையும் அறிமுகப்படுத்தி வைத்தார். அவளோடு நெருக்கமாகப் பழகும்படி செய்தார்.

"வாருங்கள்! மூவருமாகச் சீட்டாடலாம்" – என்றுதான் முதலில் அழைத்தார். சிறிது நேரத்தில் விருந்து நடந்த தம் 'கெஸ்ட் ஹவுஸ்' மாடி ஏ. சி. அறையில் அவர்கள் இருவரையும் மட்டும் தனியே விட்டு விட்டுத் தாண்டவராயன் எங்கோ மெல்லத் தலை மறைவாகி விட்டார். இப்படி ஆரம்பமான அந்தப் பழக்கம் தொடர்ந்து வாடிக்கையாகி விட்டது. தவிர்க்க முடியாத தாகியும் விட்டது.

"ரோஸி உங்களுக்கே ஃபைல்கள் பார்க்க, தப்பில்லாமல் ஆங்கிலத்தில் ஒருவரி, ரெண்டு வரி நோட் போட இதற்கெல்லாம் ரொம்ப உதவியாயிருப்பாள். கூட வைத்துக் கொள்ளுங்கள், விட்டு விடாதீர்கள். அவளுடைய சம்பளம் எல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன், உங்களுக்கு ஒரு சிரமமும் இல்லை" – என்றார் தாண்டவராயன்.

வாழ்வில் ஏற்கெனவே தனியாயிருந்த அவனுக்கு இப்படி ஒரு துணை வேண்டும் என்று தான் தோன்றியிருந்தது. இப்போது தாண்டவராயனே சொல்லியபின் அவனும் இசைந்து விட்டான். ஃபைல்கள் அவன் மாளிகையிலும், இரவிலும் ரோஸியின் வீட்டில்



இருக்கும் போது அங்கே கொண்டு வந்து வைக்கப்பட வேண்டுமென்று ஏற்பாடாகியது. இந்த ஏற்பாட்டின் மூலம் தொழில் வளர்ச்சித் துறையே தாண்டவராயனின் கவனிப்பில் சிக்கியது. ரோஸி ஃபைல்களையும், திருவையும் சேர்த்தே கவனித்துக் கொண்டாள். திருவுக்கு அவளே வேண்டிக் கொண்டபடி ஆங்கிலமும் கற்பிக்கத் தொடங்கினாள். அவனுக்கு ஒத்து வரக் கூடிய ஓர் இளம் அதிகாரி காரியதரிசியாக இருந்ததினால் ஃபைல்களைத் தாண்டவராயனின் கெஸ்ட் ஹவுஸிற்கோ, ரோஸியின் வீட்டிற்கோ, எங்கு வேண்டுமானாலும் அனுப்பத் தயாராயிருந்தார். மந்திரியின் மாணவனைப் போல அடக்க ஒடுக்கமாக அவர் நடந்து கொண்டாரே ஒழிய மந்திரிக்கு வழிகாட்டிச் சர்க்காரை இயக்கிச் செல்ல வேண்டிய பொறுப்புள்ள அதிகாரியாக நடந்து கொள்ளவில்லை. கட்சியில் திருவின் செல்வாக்கையும், வலிமையையும் புரிந்து கொண்டிருந்த மூலவர்கள் இதுபற்றி லேசாக ஏனோதானோ என்று எச்சரித்தார்களே ஒழிய வற்புறுத்திக் கண்டிக்கவில்லை. முதல்வர் இது விஷயமாகத் திருவைத் தானே நேரில் எச்சரிப்பதற்குப் பதில் வயது மூத்தவரும் அநுபவசாலியுமான தலைமைச் செயலாளரிடம் சொல்லி அனுப்பினார். தலைமைச் செயலாளர் அவனை அவனுடைய வீட்டிலோ, கோட்டையிலோ சந்திக்கவே முடியவில்லை. சிவனே என்று தலையெழுத்தை நொந்து கொண்டு அவர் தாண்டவராயனின் கெஸ்ட் ஹவுஸுக்குத் தான் அவனைத் தேடிப் போக வேண்டியிருந்தது. அவருக்கு இது புது அநுபவம்.

ஃபைல்கள் பிரித்துக் கிடந்தன. லுங்கி பனியனோடு இருந்த திருவுக்கு ஷிவாஸ்—ரீகல் — விஸ்கியை ஊற்றிக் கொடுத்துக் கொண்டிருந்தாள் ரோஸி. தலைமைச் செயலாளருக்கு 'ஏண்டா இங்கு வந்தோம்?'— என்று அருவருப்பாக இருந்தது. ஆனாலும் முதலமைச்சரின் கட்டளையை அவர் புறக்கணிக்க முடியவில்லை. மென்று விழுங்கியபடி திருவிடம் பேச ஆரம்பித்தார் அவர்.

ஒரு நிமிஷம் வெளியே போய் இருக்குமாறு அவனோடு இருந்த ஆங்கிலோ இந்திய யுவதிக்கு அவர் ஜாடை காட்டினார். அதற்கு அவள் அவரைக் கொஞ்சம் முறைத்தாற் போலப்பார்த்துவிட்டு வெளியேறினாள். பதவி ஏற்ற போது நிகழ்ந்த இரகசியக் காப்புப் பிரமாணத்தை நினைவூட்டி • ஃபைல்களை இப்படிப் பார்ப்பது முறையில்லை என்றார் தலைமைச் செயலாளர். அதிகம் 'டைல்யூட்' செய்யப்படாமல் உள்ளே போயிருந்த வெளிநாட்டுச் சரக்கின் முறுக்கிலிருந்த திரு உடனே வெளியே போயிருந்த ரோஸியைத் திரும்பவும் உள்ளே கூப்பிட்டான்.

''நீ இங்கேயே அருகிலிரு; நான் சொன்னால் தான் நீ போக வேண்டும். வேறு யாரோ சொன்னார்கள் 'என்பதற்காகப் போகக் கூடாது''— என்று அவளிடம் சொல்லிய கையோடு தலைமைச் செயலாளரின் பக்கம் திரும்பி, ''நான் மந்திரியா? நீங்க மந்திரியா? நான் தான் உங்களுக்கு உத்தரவு போடணுமே ஒழிய நீங்க எனக்கு உத்தரவு போடக் கூடாது'' — என்று போதை தள்ளாடும் குரலில் அதட்டினான் திரு. அதற்கு மேல் தம் மரியாதையையும், கௌரவத்தையும் இழக்க விரும்பாத தலைமைச் செயலாளர் மேற்கொண்டு ஒரு வார்த்தை கூட



அவனிடம் பேசாமல் அங்கிருந்து உடனே வெளியேறினார்.

''சார்! வட் யூ லைக் டு ஹாவ் எ டிரிங்க்?'' —என்று வராந்தாவில் கூழைக் கும்பிடுதலும் சிரிப்புமாகக் குறுக்கிட்ட தாண்டவராயனைப் பொருட்படுத்திப் பதிலே சொல்லவில்லை அவர். நேரே முதலமைச்சரிடம் போய், ''இனித் தயவுசெய்து இதுமாதிரி வேலைகளுக்கு என்னை அனுப்பி அவமானப் படுத்தக் கூடாது'' — என்று வேண்டிக் கொண்டார். முதலமைச்சருக்கு அதிர்ச்சியாகி விட்டது.

''தாண்டவராயன் மாதிரி ஆட்கள் எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும், எப்படிப்பட்ட ஆள், நிதி மந்திரி, தொழில் மந்திரியாக வந்தாலும் இப்படி எல்லாம் வலை விரிப்பார்கள். ஷிவாஸ் ரீகலில் வீழ்ந்த முடிந்தவனுக்குச் ஷிவாஸ் ரீகலை வாங்கி ஊற்றுவார்கள். திருப்பதி தரிசனம் பிடிக்கிறவனுக்குத் திருப்பதி தரிசனத்துக்கு ஏற்பாடு செய்வார்கள். ஜாக்கிரதையாயிருக்கணும் தம்பி!'' — என்று முதலமைச்சரே அவனைக் கூப்பிட்டு எச்சரித்த போதும் அவன் சிரித்து மழுப்பி விட்டான். தனக்குச் செய்து கொடுத்திருக்கும் உல்லாச ராஜ போக ஏற்பாடுகளைத் தவிரத் தேர்தல் நேரங்களிலும், கட்சிக்குப் பணமுடை ஏற்படுகிற சமயங்களிலும், தாண்டவராயன் தாராளமாக வாரி வழங்குவான் என்றான் இரு. மந்திரிகள் இப்படித் தரம் தாழ்ந்து ஒழுக்கம் கெட்ட காரணத்தால் அதிகார வர்க்கம் இதைவிடக் கீழிறங்கி மரியாதை இழந்தது. கூச்சம், பயம், மான அவமானம் பார்ப்பது ஆகிய அம்சங்கள் பொது வாழ்விலிருந்து மெல்ல மெல்ல மறையத் தொடங்கின. ஒவ்வொருவரும், ஒவ்வொரு முனையிலும் தவறு செய்வதற்கான வாய்ப்புக்களை எதிர்பார்த்துக் காத்து நிற்கிற மாதிரிச் சூழ்நிலை உருவாகி விட்டது.

தவறு செய்ய முன் வராதவனும், தவறு செய்யாதவனும், தவறு செய்யத் தெரியாதவனும் அப்பாவிகள் என்று கருதப்பட்டார்கள். சில வருடங்கள் ஓடின. முன்பு அவனைத் தாக்கி எழுதிய அதே பத்திரிகை மறுபடி அவன் மேல் தன் கவனத்தைத் திருப்பியது. அவனை மட்டும் 'ஸிங்கிள் அவுட்' செய்து மறுபடி தாக்கியது.

'முந்திய ஆட்சியில் இருந்தது போல் எங்கள் ஆட்சியில் லஞ்ச ஊழல் இல்லை' — என அமைச்சர் இரு பேசுவதில் ஓர் அர்த்தம் இருக்கத்தான் செய்கிறது. உண்மையில் முந்திய ஆட்சியில் இருந்ததைவிட லஞ்ச ஊழல் இப்போது இந்த ஆட்சியில் பல மடங்கு அதிகரித்து ரேட்கள் மிகவும் கூடுதலாகி விட்டன. அதைக் குறிப்பாக உணர்த்துவதற்காகவே அமைச்சர் இரு அடிக்கடி 'முந்திய ஆட்சியில் இருந்தது போல் எங்கள் ஆட்சியில் லஞ்ச ஊழல் இல்லை' என்று சொல்கிறார். இந்தச் சமிக்ஞையை மக்கள் நன்கு புரிந்து கொள்ள வேண்டும்' — என்று முன்பு எழுதி அவனை வம்புக்கு இழுத்த அதே எதிர்க்கட்சிப் பத்திரிகை இப்போது, 'ஆசை நாயகி வீட்டில் அரசாங்க ஃபைல்கள்' — என்றொரு கட்டுரையை வெளியிட்டிருந்தது. முந்திய கட்டுரையை எழுதிய 'எழில் ராஜா' என்பவனே இந்தக் கட்டுரையையும் எழுதியிருந்தான். யார் இந்த எழில் ராஜா? இவனுக்கு ஏன் என் மேல் மட்டும் இத்தனை காட்டமும், ஆத்திரமும்? இவற்றை எல்லாம் அறியும் ஆவலில் போலீஸ் சி. ஐ. டி. மூலமும், கட்சி உளவாளிகள் மூலமும் அந்த எழில்ராஜாவைப் பற்றித் தகவல்களைச் சேகரிக்கத் தொடங்கினான் இரு. தகவல்கள் தெரிந்தன. பணத்தை வீசி எறிந்து எழில்ராஜாவை வசப்படுத்த முடியாதென்று தெரிந்தது.

எழில்ராஜா மாணவப் பருவத்திலிருந்தே இருவுக்கு எதிரான அரசியல் அணியில் தேசிய இயக்க ஆளாக வளர்ந்த ஓர் இளைஞன் என்பதும் பட்டப்படிப்பு முடித்து ஓராண்டு ஜர்னலிஸம் — டிப்ளமாவுக்காகப் பயிற்சியும் பெற்று முடித்து இப்போதுதான் அந்தப் பத்திரிகையில் சேர்ந்திருக்கிறான் என்றும் தெரிந்தது. 'இன்வெஸ்டிகேடிவ்' வாக எழுதுவதில் ஆர்வம் அதிகம் என்றும் அவனைப் பற்றிச் சொன்னார்கள். தொடர்ந்து தன்னைப் பற்றியே குறி வைத்துத் தாக்கி எழுதும் அந்தப் பொடியனை எப்படிப் பழி தீர்ப்பது என்று இரு யோசிக்கத் தொடங்கினான். இன்று அதுவும் ரோஸியையும், தன்னையும் சம்பந்தப்படுத்தி அவன் எழுதியிருந்த 'ஆசைநாயகியின் அந்தப்புரத்தில் அரசாங்கஃபைல்கள்' — என்ற கட்டுரையைப் படித்ததிலிருந்தே இருவுக்கு அவனைத் தொலைத்து விடவேண்டும் என்று வெறி மூண்டிருந்தது. 'ஒரு கவலையும் வேண்டாம்! நீங்கள் இங்கே வருவது போவது, ரோஸியிடம் பழகுவது எல்லாம் பரம ரகசியமாயிருக்கும்' — என்று தாண்டவராயன் பல முறை உறுதி கூறியிருந்தும் இந்த விவகாரங்கள் எப்படி 'லீக்' ஆகின்றன என்பது இருவுக்கே புரியாத புதிராக இருந்தது. தன் வலையில் சிக்கிய மந்திரிகள் தனக்கு எதிராகப் போய்விடக்கூடாதென்பதற்காகத் தாண்டவராயனே இரகசியமாகப் பின்னால் அவர்களைப் 'பிளாக் மெயில்' செய்யப் பயன்படும் என்று சில புகைப்படங்கள் எடுத்துக் கொள்வது வழக்கம். இருவுக்கு ரோஸி மது ஊற்றிக் கொடுப்பது போல் தாண்டவராயன் இரகசியமாக எடுத்த புகைப்படம் ஒன்றை பிரிண்ட் போடக் கொடுத்த இடத்தில் —பிரிண்ட் போட்டவன் அதிகப்படியான பிரிண்ட் ஒன்றை எடுத்துக் கொண்டு தான் 'நெகடிவ்'வைத் திருப்பிக் கொடுத்தான். இதை எப்படியோ மோப்பம் பிடித்துச் சில ஆயிரங்கள் வரை விலை கொடுத்து அந்தப் 'பிரிண்ட்'டை வாங்கினான் எழில்ராஜா. இரண்டு ரூபாய் பெறுமானமுள்ள பிரிண்டுக்கு ஆயிரக் கணக்கில் பணம் கிடைக்கும் போது ஸ்டுடியோக்காரன் அதைக்கொடுக்கத் தயங்கவில்லை.

அதுமட்டும் எதிர்க்கட்சியைச் சேர்ந்த பத்திரிகையாக இல்லாத பட்சத்தில் இரு அந்தப் பத்திரிகை முதலாளியைக் கூப்பிட்டே அரட்டி மிரட்டி எழில்ராஜாவை வேலையிலிருந்து துரத்தும்படி செய்திருப்பான். அல்லது மேற்கொண்டு தன்னைப்

பற்றி எதுவும் எழுத முடியாதபடியாவது தடுத்திருப்பான்.

அது நாற்றுக்கு நூறு அவனது எதிர்த்தரப்புப் பத்திரிகையாகவே இருந்ததனால் அப்படி ஏற்பாடு எதுவும் சாத்தியமாகவில்லை. தவிர எழில்ராஜாவின் கட்டுரைகள் மிகவும் பரபரப்பாகப் பேசப்பட்டு அந்தப் பத்திரிகையின் விற்பனையே அதன் காரணமாகப் பல ஆயிரம் பிரதிகள் கூடியிருந்தன. இன்வெஸ்டிகேஷன், பிரயாணங்கள், தடயங்களை விலை பேசி வாங்குதல், ஆகியவகைகளில் எழில்ராஜாவுக்கு ஆகிற செலவுகளை எல்லாம் அந்தப் பத்திரிகை மிகவும் தாராளமாகவே செய்வதாகத் திருவுக்குத் தகவல் கிடைத்திருந்தது. அதனால் பத்திரிகை நிறுவனத்தை மிரட்டி ஒடுக்கும் செயல் பயனளிக்காது என்று புரிந்து விட்டது. எழில் ராஜாவை எப்படித் தொலைப்பது என்று அவன் எரிச்சல் பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் 'விஸ்கிக்கும் விலைமாதருக்கும் நடுவில் அரசாங்க ஃபைல்கள்' — என்ற மூன்றாவது கட்டுரையும், அந்தப் புகைப்படமும் வெளிவந்து திருவை ஒரு வார காலம் வெளியே தலை காட்ட முடியாமல் செய்து விட்டது. தாண்டவராயனின் கெஸ்ட் ஹவுஸில் மேஜையில் கிடக்கும் அரசாங்க பைல்களோடு—ரோஸி தனக்குப் பாட்டிலிலிருந்து மது ஊற்றிக் கொடுப்பது போன்ற அந்தப்புகைப் படத்தை யார் எப்படி எடுத்து அந்தப் பத்திரிகைக்குக் கொடுத்திருப்பார்கள் என்பதுதான் திருவுக்கு விளங்காத மர்மமாயிருந்தது. ஒருகணம் தாண்டவராயன், ரோஸி, கெஸ்ட் ஹவுஸ் வேலையாட்கள், எல்லோர் மேலேயும் சந்தேகமாயிருந்தது. இனியும் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது என்ற அளவு அவனுடைய ஆத்திரம் எல்லை மீறிப்போய் விட்டது. ஒன்று தான் உயிர் வாழ வேண்டும். அல்லது அந்தப் பொடியன் எழில்ராஜா உயிர் வாழ வேண்டும். என்று வைராக்கியத்தோடு ஒரு முடிவு செய்தாக வேண்டிய நிலைக்குத் தூண்டப்பட்டான் அவன். எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை — எழில்ராஜாவைத் தீர்த்துக் கட்டி விட வேண்டியது தான் என்று முடிவு செய்தான். உளவாளிகள் மூலம் தெரிந்த தகவலின்படி எழில்ராஜா அபாரத் துணிச்சலும் தைரியமும் உள்ளவன் என்று தெரிந்தது. திருவல்லிக்கேணியிலோ, ராயப்பேட்டையிலோ தன்னையொத்த வயதுள்ள இரண்டு மூன்று இளம் பத்திரிகையாளர்களுடன் ஓர் அறையில் தனியாக வசிக்கிறான் என்றும் தெரிந்தது. எப்படிக் கண்ணி வைத்து எந்த மாதிரி ஆளைத் தீர்ப்பது என்று திருவும் அவனுடைய அடியாட்களும் யோசித்தனர். எழில்ராஜாவின் இலக்கு திருவாக இருந்ததால் திரு மறைமுகமாகச் சம்பந்தப்பட்டிருந்த ஒரு கள்ளச் சாராயத் தொழிற்சாலை அமைந்திருந்த வளசரவாக்கத்து மாந்தோப்புக்கு அன்றிரவு திருவே வர இருப்பதாகத் தகவல் சொல்லி எழில்ராஜாவை அங்கே இழுக்கலாம் என்று திட்டமிட்டனர். தகவலை எழில்ராஜாவிடம் போய்ச் சொல்கிறவர்கள் கதர்ச் சட்டை குல்லாய் அணிந்து,



'ரவி,

ரோமானிய வீரன் சீஸர் பிறந்த போது அவனுடைய தாயாரின் வயிற்றை ஆபரேஷன் செய்ததால் அன்றிலிருந்து அந்த மாதிரி ஆபரேஷன்களுக்கு ''சிஸேரியன்'' என்று பெயர் வந்தது.

தகவல்: பாரதி அன்பெழிலன்.

---

தேசிய ஆட்கள் போலத் தங்களைக்காட்டிக் கொள்ள வேண்டும் என்றும் ஏற்பாடாயிற்று. அப்போது தான் எழில்ராஜாவுக்கு அந்தத் தகவலில் நம்பிக்கை ஏற்பட்டு அவர்களோடு போய் அதைப்பற்றி ஒரு கட்டுரை தயாரிக்கத் தோன்றும் என்று திருவும், மற்றவர்களும் நம்பினார்கள். கூட்டிக் கொண்டுபோய் ஆளரவமற்ற பகுதியில் எழில்ராஜாவின் வரலாற்றை அன்றிரவோடு தீர்த்து முடிவுரை எழுதி முடித்து விடலாம் என்பது அவர்கள் திட்டமாயிருந்தது.

ஆட்களுக்கு எல்லாம் சொல்லிப் பணம் கொடுத்து அனுப்பி விட்டு அவன் வேறு வேலைக்குக் கிளம்பலாம் என்று எழுந்த போது புலவர் வேணுகோபால சர்மா அவனைத் தேடி வந்தார். ''வாங்க சாமீ! ஏது ரொம்ப நாளாக் காணவே இல்லியே?'' என்று அவன் புலவரை வரவேற்றான். சினிமா வேலைகள் குறைந்து அவன் பதவியேற்று மந்திரியான பின்பு எப்போதாவது அவன் எழுத வேண்டிய கட்டுரைகள், அறிக்கைகளை எழுதித் திருத்தி அளிக்க வருவதோடு இப்போது அவர் தொடர்பு குறைந்து போயிருந்தது.

இன்று வந்ததும் வராததுமாக அவரே அவனை முந்திக் கொண்டு ஆரம்பித்தார். அவரது குரலிலும், முகத்திலும் ஒரே ஆச்சரிய மயம்.

''உங்களுக்குத் தெரியுமோன்னோ? அதைச் சொல்லிட்டுப் போலாம்னு தான் வந்தேன். ஒருவகையிலே உங்களுக்கு அதிர்ச்சியாகவும், கோபமாகவும் இருக்கும். இன்னொரு விதத்திலே நீங்க பெருமைப் படவும் செய்யலாம்...''

என்று தொடங்கி ஒரு கணம் நிறுத்தி விட்டுச் சர்மா சொன்ன தகவலைக் கேட்டதும் தன் தலையில் பயங்கரமான பேரிடி ஒன்று விழுந்தது போல் உணர்ந்தான் திரு. கண்முன் உலகமே இருண்டு கொண்டு வந்தது. 'பாவி மனுஷா! நீர் ஒரு நிமிஷம் முன்னால் வந்து தொலைத்திருக்கக் கூடாதா?' —என்று அவனுடைய உள்ளம் கோவென்று அலறியது. ஆனால் பேசக் குரல் எழவில்லை.

(தொடரும்)

## யோகாசன மகிமை

# பஸ்சி மோத்தாசனம்



மயிலாப்பூர் பாரதீய வித்யாபவன் கலையரங்கத்தின் மொட்டை மாடி. பத்துப் பதினைந்து இளைஞர்கள். சுகமான காற்று வீசுகிறது. மாலை வேளையில் இங்கே யோகாசனப் பயிற்சி நடைபெறுகிறது.

விவேகானந்த கேந்திராவைச் சேர்ந்த உற்சாகமான இளைஞர் **திரு. ஏ. சண்முகம்** இந்த வாரம் பயிற்சி விளக்கம் தருகிறார். அயனாவரத்தில் உள்ள இ. எஸ். ஐ. மருத்துவ மனையிலும் இவர் போய், யோகாசனம் கற்றுத் தருகிறார்.

**பயிற்சி முறை:**

இரண்டு கால்களையும் நன்றாக நீட்டி அமர்ந்து கொள்ள வேண்டும். கைகளை இடுப்புப் பக்கம் தரையில் நன்கு ஊன்ற



வேண்டும். உள்ளங்கைகள் தரையைப் பார்த்து இருக்க வேண்டும். பிறகு கைகளைத் தூக்கித் தோள் மட்டத்துக்குப் பக்கவாட்டில் நீட்ட வேண்டும். பிறகு இரண்டு கைகளையும் செங்குத்தாக மேலே தூக்க வேண்டும். இந்த நிலையில் கைகள் காதுகளை ஒட்டி இருக்க வேண்டும்.

அப்படியே நீட்டிய கரங்களுடன் முன்புறம் குனிய வேண்டும். கால்களை வளைக்காமல், கைகளின் நடுவிரலையும், ஆள்காட்டி விரலையும் சேர்த்து வளைத்து அந்த அந்தக் கால்களின் கட்டை விரல்களைப் பிடித்துக் கொள்ள வேண்டும்.

முழங்கைப் பகுதிகளைக் கால்களின் பக்கவாட்டில் கொண்டு வந்து முகத்தை, முழங்கால்களுக்கு நடுவில் படிய வைக்க வேண்டும். நெற்றி முழங்கால்களில் பதியலாம். குதிகால்கள், முட்டி இவை பிரியாமல் இணைந்தே இருக்க வேண்டும். இது தான் ஆசன நிலை. முப்பது வினாடிகள் வரை அதிகபட்சம் இதில் இருக்கலாம். பத்துப் பதினைந்து வினாடிகளை கூடப் போதுமானது. இந்த நிலையை எடுத்த எடுப்பிலேயே எட்ட முடியாது. எட்ட முயலவும் கூடாது. படிப்படியாக இறுதி நிலைக்குப் போக வேண்டும். சிறிது சிறிதாக உடலை வசப்படுத்த வேண்டும். இதற்குப் பல நாட்கள் ஆகலாம். பாதகமில்லை.

சமநிலைக்குத் திரும்புவதற்கு முன், விரல்களை விட்டுவிட்டுக் கைகளைத் தோளுக்கு மேலே உயர்த்தி மார்பைச் சற்று நிமிர்த்தி விட்டுப் பிறகு பக்கவாட்டில் கைகளை நீட்டி அப்புறம் ஆரம்ப நிலைக்கு வர வேண்டும். இப்படி நிதானமாகவும், படிப்படியாகவும் செய்யா விட்டால் வயிற்றில் மார்புக் கூட்டுக்குக் கீழேயுள்ள பள்ளத்தில் பிடித்துக் கொள்ளும். இதில் கவனமாக இருக்க வேண்டும்.

பயிற்சி ஆரம்ப நாட்களில் முழங்கால்களின் பின்புறம் தரையில் படியாமல் தூக்கிக் கொள்ளும். அதனால் பாதகமில்லை. பழகப் பழக நாளடைவில் சரியாகி விடும்.

ஒவ்வொரு ஆசனம் முடிந்தபிறகும் உடலைத் தளர்த்தி மல்லாந்து படுத்த நிலையில் ஓய்வு எடுக்க வேண்டும்.

பஸ்சிமோத்தாஸனம் பழகுவதினால் ஏற்படும் நன்மைகளை அடுத்தவாரம் பார்ப்போம்.

—சுப்ரபாலன்.

ஆசனம் பயில்பவர்: திரு. அசோக்குமார்
புகைப்படம்: தாமு

# நீங்கள் கேட்டவை

○ அ. செல்வராஜ், கரூர்.

? கா. கா. வின் எம். எல். ஏ. நெடுமாறனின் தற்போதைய சிந்தனை எதுவாக இருக்கும்?

! 'இந்த ஒன்றாவது நிலைக்குமா?' என்பதாக இருக்கலாம்.

○ க. குமரேசன், திருவாரூர்.

? உங்கள் இதயத்தைத் தொட்டு உலுக்கிய நிகழ்ச்சியொன்றைக் கூறிட முடியுமா?

! அன்புள்ள சந்திரா, உன்னைப் போன்ற அன்பும், பண்பும் மிக்க ஒரு நண்பனை என்று காண்பேன் இனி? சிறு தொழில் அதிபர்தான் நீ. எல்லாரும் பிர்லா, டாட்டாக்களைப் போல் மகத்தான சாதனைகள் புரியத் தேவையில்லை. அவரவர் கடமையை ஒழுங்காகச் செய்து வருவதே தேசப்பணி, தேச பக்தி என்பது போல் அடக்கமாகவும் அமைதியாகவும் இயங்கி வந்தாய். உன்னுக்குள்ளே அரித்தெடுக்கும், சொல்லி முடியாத உபாதைதரும் ஓர் அபூர்வமான நோய்க்கு உன்னைப் பிடித்துப் போயிற்று. லட்சத்தில் ஒருவனாக நீ அதற்கு அடைக்கலம் அளித்து வந்தாய். அதைச் சகித்துக் கொண்டே மிருதுவாகவும், சதா புன்முறுவலுடனும் என்னிடமும் எல்லோரிடமும் பேசிப் பழகி வந்தாய். உன் மனைவி சிவசங்கரியிடம்தான் உனக்கு எத்தனை அன்பு! உன் கண்களிலே விகசித்த அந்தக்காதல் செயலிலும் பரிணமித்தது. எழுத்துப் பணிக்கு இடையூறு விளைவிக்காததுமட்டுமல்ல; ஊக்குவித்தும் வந்தாய். சிவசங்கரியுடன் தொடர்கதை பற்றி விவாதிக்க உங்கள் வீட்டுக்கு வந்திருந்தேனே, அப்போது அன்புத் தொல்லை கொடுத்தது உங்கள் செல்ல நாய். 'நான் இவனை அழைச்சுண்டு போறேன். நீங்க நிம்மதியாப் பேசுங்க' என்று அவனுடன் தோட்டத்தில் உலாவப் போனாயே. அந்தப் பெருந்தன்மையும் உடனிருந்து என்னை உணவருந்தச் செய்து உபசரித்த விருந்தோம்பல் பண்பும்... எப்படி ஐயா மறப்பேன்! இத்தனை இளம் வயதில் உன்னைவிடச் சிறியவளான மனைவியைத் தவிக்க விட்டுவிட்டுப் போயிருக்கலாமா நீ? உன் அசைவற்ற உடலை சிவசங்கரி முத்தமிட்டாளே. அப்போதாவது ஸ்லீப்பிங் பியூட்டி கதையில் வருவது போல் ஓர் அற்புதம் நிகழ்ந்து நீ உயிர் பெற்றிருக்கக் கூடாதா? உன் உடலைத் தூக்கிப் போகும்போது உன் தொழிலகத்தில் பணியாற்றும் ஊழியரெல்லாம் விசும்பி விசும்பி அழுதார்களே, அது உன் அன்பு சிலரிடம் மட்டும் காட்டப்படுவதல்ல, சகலருக்கும் அபரிமிதமாக வழங்கப்படுவது என்பதையல்லவா உணர்த்தியது! அன்பனே, சந்திரா, கடைசி சில நாட்களில் நீ மிகுந்த நோய் வாய்ப்பட்டிருந்த போது உன்னை வந்து பார்க்குமாறு டெலிஃபோனில் சிவசங்கரி அழைத்தும் ஏதேதோ காரியங்களால் ஒத்திப்போட்டு கடைசியில் வராமலே இருந்து விட்டேன். குற்ற உணர்வு என்னைப் பிடித்திருக்கிறது. நண்பனே, என்னை மன்னிப்பாயா?


○ டாப்பானவர்


○ கேகே


○ இளவரசி


○ வெளியேற்றம்

○ எஸ். சம்பத்குமார் சென்னை-5.

? உடன் பிறப்பு, ரத்தத்தின் ரத்தம் — என்ன வேறுபாடு?

! விசில்.

# அ.தி.மு.க. உட்பூசலின்

○ நாகை பொன்னி, கும்பகோணம்.

? வெள்ளை உடையின் சிறப்பு என்ன?

! பாரதி ராஜாவைப் பொறுத்தமட்டில் மகிழ்ச்சிப் பரவசம்; கிறிஸ்துவப் பாதிரிகள், கன்னிகாமடத்தைச் சேர்ந்தவர்கள் பொறுத்தமட்டில் தூய்மை; ஹிந்து விதவைகளைப் பொறுத்தமட்டில் தவம்; காங்கிரஸ்காரர்களைப் பொறுத்தமட்டில் (இன்று) லஞ்ச ஊழல்..

○ என். சண்முகம், உள்ளி (வ. ஆ.)

? ஃபரூக் ராமாராவ் வரிசையில் அடுத்து ஹெக்டே இடம் பெறுவாரா?

! சதித் தொடர் கதையின் முதல் அத்தியாயமே அங்குதான் எழுதப்பட்டது. ஒரு திடீர் திருப்பத்தில் சதித்திட்டம் பிசுபிசுத்துப் போக ஸஸ்பென்ஸில்





○ பரிதாபம் ○ தற்போதைய சிந்தனை

விடப்பட்டிருக்கிறது. மூன்று நாலு அத்தியாயங்களுக்குப் பிறகு மறுபடி ஹெக்டேயிடம் வருவார் கதாசிரியர்.

○ ஆர். அரிகோபி, குடியாத்தம்.

? ஆந்திரா பலப் பரீட்சையில் வெல்லப் போகிறவர் யார்?

! வெற்றி என்.டி. ஆருக்கா, அல்லது பாஸ்கரராவ் — ராம்லால் — இந்திரா அணிக்கா என்பதை விட ஜனநாயகத்துக்கா, சர்வாதிகாரப் போக்குக்கா என்று கேட்பதே சிறந்தது. சர்வாதிகாரப் போக்கு முதலில் வெற்றி பெறுவது போல் தோன்றலாம். இறுதியில் வாய்மையே வெல்லும்.

# முடிவு என்ன?

○ ஏ. ஜெகந்நாதன், திருச்சி.

? இலவச மின்சாரம், 15 வயது வரை மதிய உணவு, வேலை இல்லாதவர்களுக்கு உதவித் தொகை என்று அறிவித்துக் கொண்டே போகிறாரே. இன்னும் பத்தாண்டுகள் இவர் ஆட்சியில் இருந்தால் தமிழகத்தின் பொருளாதாரம் எந்த நிலைமையில் இருக்கும்?

! தொழில் துறையிலும் பொருளாதாரத்திலும் அனைத்து மாநிலங்களை விட முன்னணியில் இருப்போம் — கடைசியிலிருந்து கணிக்கும் போது. மாநிலங்களும் தேசமும் முன்னேற, ஏழ்மை ஒழிய ஒரே மார்க்கம் தொழில்வளப் பெருக்கம் — அதிகரித்த வேலைவாய்ப்பு— இதற்கு ஆவன செய்யாமல் உற்பத்திக்கு உதவாத இனங்களில் வரிப்பணத்தை விரயம் செய்தால் வோட்டுக்கள் விளையலாம்; பொருளாதாரம் செழிக்காது.

○ ரம்யா, கோவை.

? ரேவதி, இளவரசி, நளினி — யார், யார் எதில் எதில் டாப்?

! ரேவதி — நடிப்பில்; இளவரசி — காஸ்ட்யூம் பிரச்னை தருவதில்; நளினி — கிசுகிசுக்க வைப்பதில்.



○ ஆர். மார்க்கண்டன், சென்னை.

? சீக்கியர்களில் ஒரு பகுதியினரின் அடாவடிப் போக்குக்கும் பஞ்சாப் மாநிலத்தின் இணையற்ற செல்வச் செழிப்புக்கும் சம்பந்தம் உண்டு அல்லவா?

! உண்டு. பஞ்சாப் பிரச்சினைக்கு அதுவும் ஒரு காரணம்; அது மட்டுமே காரணமல்ல.

○ எஸ். சௌரிராஜன், லெட்சுமாங்குடி. ★

? அ. தி. மு. க. உட்பூசலின் முடிவு என்ன?

! எஸ். டி. எஸ்ஸும் ஆதரவாளர்களும் வெளியேற்றப்படுவார்கள்; ஜெ (அடுத்த முதல்வராக, இளவரசியாக முடிசூட்டப் பெறுவார். அ. தி. மு. க. அளிக்கும் ''உட்பூசல்'' நாடகத்தின் கிளைமாக்ஸ் காட்சியை மட்டும் விவரித்தால் போதுமா? **சோகக் காட்சி:** கொள்கை ரீதியாக யாரும் எதுவும் பேசக்கூடாது என்ற வாய்ப்பூட்டு அமைச்சர்களை அலிகளாக்கும் காரியம். என். டி. ஆர். பதவி நீக்கம் பற்றிக் கேட்கப் பட்டபோது, பண்ருட்டி, 'ஆளை விடுங்க. என்னிடம் ஒன்றும் கேட்காதீங்க. மேலிடம்தான் பேச வேண்டும்' என்று கூற நேர்ந்தது பரிதாபம். **டர்னிங் பாயிண்ட்:** மந்திரிகள் எம். எல். ஏக்கள் மீது லஞ்ச ஊழல் புகார்களை விசாரிக்க உயர் மட்டக்குழு அமைக்கப்பட்டிருப்பது லஞ்ச ஊழல் இருப்பதாக ஒப்புக் கொண்டதற்குச் சான்று. **செண்டிமெண்டல் அப்ரோச்:** காமராஜ் திட்டப்படி எல்லா அமைச்சர்களிடமும் ராஜினாமா கடிதம் வாங்கி வைத்துக் கொள்வது. **ஸஸ்பென்ஸ்:** என்னால் கட்சி பிளவுபட வேண்டாம் நான் ராஜினாமா செய்கிறேன் —ஜெயலலிதா. ராஜினாமா கடிதத்தைக் கட்சி மேலிடம் ஆராயும் — எம்.ஜி.ஆர். **காமெடி டிராக்:** என். டி. ஆர். பதவி நீக்கம் குறித்து வீராவேசத்துடன் தந்தி அனுப்புகிறார் ஜெயலலிதா. மறுநாளே வாபஸ் பெறுகிறார்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
எஸ். சௌரிராஜன்,
8, கொரடாச்சேரி ரோடு,
லெட்சுமாங்குடி
தஞ்சை மாவட்டம்—614 102.

○ என்று காண்போம் இனி ○ பிரச்னை





# அம்பாசமுத்திரம் கூறும் அதிசயக்கதை

அம்பா ஸமுத்திரம் என்று ஏன் பெயர் வந்தது என்று ஒரு கேள்வி. சமுத்திரமே இல்லாத இடத்தில் இப்படிப் பெயர் வரக் காரணம் நிச்சயமாக இருந்திருக்க வேண்டும்.

கருணை ஸமுத்திரமான தெய்வங்கள் இந்த ஸமுத்திரம் வட்டத்தில் இருந்து அருள் புரிவது காரணமாக இருக்கலாம்.

தாம்ரபர்ணி தீரத்தில் அமைந்துள்ள செழுமையான ஊர் இது. பற்பல கோயில்கள் சிறந்து விளங்கும் தலம்.

நதிக் கரையிலேயே இருக்கிறது வாழ உகந்த அம்மன் கோவில், சின்னக்கோவில் தான். ஆனால் அம்பாள் சக்தி வாய்ந்த தெய்வம் என்று இந்த வட்டாரத்திலுள்ள பக்தர்கள் கூறுகிறார்கள்.

சிரித்து மேல் நோக்கி எழுந்த முடி. அக்னி ஜ்வாலை போல் இருக்கிறது. சண் மலர் சாத்திய விழிகள் கருணையைப்பொழி கின்றன. மல்லிகை மாலைகள் மணம் வீசு கின்றன. ஆரஞ்சு வண்ணக் கரை போட்ட நீல நிறப் புடவை அந்தி நேர வானத்தை நினைவூட்டுகிறது.

''தாயே காப்பாத்துன்னு சொல்லுடா''.

''காயே தாக்காப்பூ'' கிணுகிணுவென்ற கிரிப்பொலி. விஷயம் புரியாமல் பிரார்த் தனை செய்யும் குழந்தையின் மழலையைக் கேட்டு நாமும் ஆனந்தமடைகிறோம். என்ன அழகான நிமிடம் அது! விசாரங்கள் ஏதும் இல்லாமல், இது வேண்டும் அது வேண்டும் என்று பிரார்த்திக்காமல் குறை தீர்க்க வேண்டும் என்று இறைஞ்சாமல் தேவியின் சந்நிதியில் ஒரு நிமிடம் கபடமற்ற குழந்தை யோடு சந்தோஷமாக இருக்கக் கிடைத்தது. வெளி மண்டபத்தில் இருந்த பரிவாரத் தேவதைகளை வணங்கி விடைபெற்றுக் கொண்டு யோக மாயையுடன் பிறந்தவ ரான ஸ்ரீ கிருஷ்ண சுவாமியைத் தரிசிக்கப் போகிறோம்.

வெளியே எல்லாக் கோவில்களையும் போலத்தான். இருட்டி விட்டதால் பிராகா ரத்தில் ஒன்றும் தெரியவில்லை. உள்ளே சென்று சந்நிதியின் முன்னால் நிலைக்கு அருகில் நின்று பார்க்கும் போது உற்சவ மூர்த்தியான வேணுகோபாலன் ருக்மிணி சத்தியபாமா சமேதராக நின்று கொண் டிருக்கிறார்.

''ஸ்ரீ வேணுகோபாலா ஸ்ரீ ருக்மணி லோலா'' என்று குறிஞ்சி ராகம் மனத்தை நிரப்ப, பின்னால் கருவறையில் இருக்கும் மூல மூர்த்திகளைப் பார்க்கிறோம். ஒன்பது தலையுடன் பெரிய ஆதிசேஷன். அவருடைய நிழலில் நிற்கும் வேணுகோபாலன் ஸ்ரீருக் மிணி ஸத்ய பாமா. ''தூரத்தில் இருக் கிறதே, தெளிவாகத் தெரியவில்லையே'' என்ற மனக்குறை வார்த்தைகளாக வந்து விட்டது. ''உள்ளே வாங்கோ!'' என்று அன்புடன் உற்சவ மூர்த்திகள் இருக்கும் மண்டபத்துக்குள்ளே அழைத்துச் செல் கிறார் பட்டர். கருவறையின் அருகே சென் றதும் நல்ல வெளிச்சத்தில் பளிச்சென்று காட்சி தருகிறார் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா. வெள்ளி ஆதிசேடன் தகதகவென்று பிரகா சிக்கிறார். அந்த ஒளி பொருந்திய பின்னணி கருநிற வண்ணனை மாயக்கண் ணனைக் குழலூதும் மன்னனைப் பளிச்சென்று எடுத்துக் காட்டுகிறது. இருபுறமும் மஞ்சள் நிறப்பட்டு உடுத்தி ராஜ கம்பீரத்தோடு வேணுகானத்தில் மயங்கிய நிலையில் ஸ்ரீ ருக்மிணி சத்யபாமா.

கண்ணப் பெருமானை சிருங்கார நாயகனாக வும் கோபிகா வல்லபனாகவும் வருணிப்பது மரபு. நெற்றியில் திருநாமம் துலங்க, இடது கையை மடித்து வலது பக்கம் குழல் பிடித்து ஒய்யாரமாக நிற்கும் அழகு அவரை ரசிக சிரோமணியாகவே

**ஆனந்தி**

✖ கிருஷ்ணசுவாமி



நமக்குத் தோன்றச் செய்கிறது. தான் இசைக்கும் இசையில் தானே சொக்கி, மயங்கி நாத வடிவமாகவே அவர் நிற்கிறார். அந்த இன்பத்தில் நாமும் தோய்ந்து போக வேண்டியது தான். இங்கு சிருங்காரம், வாத்ஸல்யம், எதற்குமே இடமில்லை.

புலியுள் நான் கண்ட தோ ரற்புதம்கேளீர்
  பூணிமேய்க்கும் இளங் கோவலர்கூட்டத்து
அவையுள் நாகத்தணையான் குழலூத
  அமர லோகத்தளவும் சென்றிசைப்ப
அவியுணா மறந்து வானவ ரெல்லாம்
  ஆயர்பாடி நிறையப் புகுந்துஈண்டி
செவியுணாவின் சுவை கொண்டு மகிழ்ந்து
  கோவிந்தனைத் தொடர்ந்து என்றும்
                  விடாரே!

என்ற பெரியாழ்வார் திருமொழியை நினைத்துக் கொண்டு மயங்கி நிற்கிறோம்.



⌘ அருள்மிகு மரகதாம்பிகை



⌘ வாழ உகந்த அம்மன்

மூலவருக்குத் தீபாராதனை செய்து வலமாக வந்து உற்சவரைச் சேவித்துக் கொள்கிறோம். அகன்ற பட்டுக்கரை போட்ட உத்தரீயமும், பாதம் வரை தொங்கும் காசு மாலையும், கல்லிழைத்த பதக்கங்களும் பொன் முடியும் அணிந்து வைஜயந்தி மாலை தோள்களை அலங்கரிக்க வட்டமான திருவாசியின் நடுவே நின்று சேவை சாதிக்கிறார். தேவிகள் இருவரும் இசையைக் காது கொடுத்துக் கேட்கும் பாவனையில் கண்ணன் பக்கமாகச் செவி சாய்த்து நிற்பது போலவே தோன்றுகிறது. ஸில்க் பாவாடை தான் பொருத்தமில்லாமல் இருக்கிறது.

நிலைக்கு அருகில் கூப்பிய கரங்களுடன் ஆஞ்சனேய சுவாமி நிற்கிறார். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கோவிலில் ஆஞ்சனேயர் இருப்பது அபூர்வம். அவரைப் பிரதக்ஷிணம் செய்து கொண்டு வெளிப் பிராகாரத்தை அடைகிறோம்.

அம்பாசமுத்திரத்தில் உள்ள இன்னொரு முக்கியமான கோவில் எரிச்சாவுடையார் கோவில். இங்கு அதிகாலையில் சென்று தண் பொருனை நதியில் நீராடி விட்டுக் கோவிலுக்குச் செல்வது ஒரு சுகமான அனுபவம். ஆற்றில் தண்ணீர் சுழித்துக் கொண்டு ஓடுகிறது. படித்துறை வசதியாக இருக்கிறது. அங்கங்கே மஞ்சள் உரைத்த அடையாளம். பலர் துணி தோய்த்துக் கொண்டிருக்கின்றனர். சோப்புத் தண்ணீர் ப்ரோக்ஷணம்! தண்ணீர் ஜில்லென்று இருப்பதால் அமிழ்வதற்குச் சற்றுத் தயங்கிப் பின்னர் பொதிகை மலையிலிருந்து இழியும் நீரில் வராக தீர்த்தத்திலிருந்து வரும் தீர்த்தத்தில் மூழ்கிப் பிராரப்த கர்மங்களால் சுமந்து கொண்டிருக்கிற வினைகளைக் கழுவிக் கொண்டு கரையேறுகிறோம்.

தீர்த்தக் கரையின் எதிரே உள்ள கோவில் வாசலைப் பார்த்துக் கொண்டே படியேறுகிறோம். விபூதி ருத்ராக்ஷத்துடன் அனுஷ்டானம் செய்யும் பெரியோர் சிலர். ஈரப் புடவையுடன் கோவிலுக்குச் செல்கின்ற பெண்கள் சிலர். அழகான காட்சி.

வாசலைத் தாண்டியதும் எதிரே ஷண்முகநாதர் ஸந்நிதி. இந்த ஆறுமுகப் பெருமானை சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன்னால் கோவில் அர்ச்சகர்கள் ஒன்று சேர்ந்து செய்து வைத்தார்களாம். அழகான வெண்கலத் திருமேனி. எதிரே முன் குடுமியுடன் ஒரு விளக்குப் பிடிக்கும் பக்தரைப் பார்க்கிறோம்.

அருள்மிகு காசிநாத சுவாமியைத் தரிசனம் செய்து கொண்டு தேவியின் ஸந்நிதிக்கு வருகிறோம். அர்ச்சனைத் தட்டுடன் சமர்ப்பித்த பிச்சிப்பூச் சென்டை அப்படியே மரகதாம்பிகையின் கிரீடத்தில் சூட்டினார் திரு. சுப்பிரமணிய பட்டர். (சிவன் கோவிலானாலும் பட்டர் தான் என்று கூறினார்.) 'மரகத சாயே சிவ ஜாயே' என்று பூர்வி கல்யாணியில் பாடிக்கொண்டே அர்ச்சனை தீபாராதனையைக் காண்கிறோம். சந்தனம் பொரி பிரஸாதமாக வழங்கினார். மரகத மேனியில் நீல வண்ணப் புடவை

தவழ்கிறது. அதிக ஆடம்பர அலங்காரங்கள் இல்லாமல் அமைதியாகச் சரவிளக்கில் சுடர் விடும் தீபம் போல முத்துச் சுடராக மிளிர்கிறான். சந்தனக் காப்பு அலங்காரம் செய்யும் போது பார்க்கப் பதினாயிரம் கண் வேண்டும் என்று கூறினார்கள்.

ஸ்ரீ காசிநாத சுவாமி கிழக்குப் பார்த்த சந்நிதி. பிராகாரத்தை வலம் வரும்போது இன்னொரு சிவலிங்கத் திருமேனியைத் தரிசனம் செய்கிறோம். இவர்தான் எரித்தாட்கொண்டார் சுவாமி. மேற்கு நோக்கிய சந்நிதி. எதிரே நந்தி பகவான். அதன் பின்னே நான்கடி உயரத்தில் ஒரு கல்தூண். கருவறைக்கு எதிர்ப்பக்கத்தில் சங்கு சக்ர தாரியாய் ஸ்ரீமந் நாராயணன்.

இந்தக் கோவில் தான் பழைமையானதாக இருந்திருக்க வேண்டும். எரித்தாட்கொண்ட தேவரைப் பற்றி ஒரு அதிசயமான கதை வழங்குகிறது. சென்ற ஆண்டு தீபாவளி மலரில் பெரியவர்கள் சொன்ன கன்னடியன் - கால்வாய் என்ற அரிய கதையைப் படித்தவர்களுக்கு இந்த எரித்தாட்கொண்டார் வரலாறு தெரிந்தே இருக்கும். மிகவும் சுவாரஸ்யமாகப் பெரியவர்கள் சொல்லியிருக்கும் வரலாற்றின் சாராம்சம் இதுதான்:

தான் தானம் வாங்கிக் கொண்ட பொன்னை உலக க்ஷேமத்துக்காகவே செலவு செய்ய வேண்டும் என்று ஒரு கன்னட பிரும்மச்சாரி உறுதி பூண்டார். ஒரு சிவாச்சாரியாரிடம் பொன்னை ஒப்படைத்து விட்டு என்ன வழியில் அரசர் தானங்கொடுத்த பொன்னைச் செலவு செய்யலாம் என்று யோசனை கேட்க அகத்தியரிடம் சென்றார். மக்கள், மிருகங்கள் அவர்களைப் போஷிக்கும் பயிர் பச்சைகள் எல்லாம் பயன் அடையும்படி ஒரு கால்வாய் வெட்டச் சொன்னார் அகத்தியர். ஒரு தெய்வப்பசு தோன்றும் இடத்தில் வெட்டத்தொடங்கி அது மறையும் இடத்தில் ஏரியாக முடித்து விடச் சொன்னார். அதன்படியே மணிமுத்தாறு நதியும், பொருனையும் கூடும் இடத்திலிருந்து பசுவைத் தொடர்ந்து சென்று கால்வாய் வெட்டப் பிளான் போட்டுக் கொண்டார் அந்தக் கன்னடியன்.

---

"நீங்கள் சிறுகதை இலக்கியத்துள் நுழைந்தது நல்லதாப் போச்சு."

"ஏன்?"

"நாவல் இலக்கியமாவது பிழைத்ததே." —கோவை. அ. கதிர்வேல்.




அம்பாஸமுத்திரத்துக்கு ஓடிவந்து சிவாச்சாரியாரிடம் தான் கொடுத்து வைத்திருந்த பொன்னைக் கேட்டார். துவரம் பருப்பு அளவு பொன்மணிகளைக் கட்டிக்கொடுத்திருந்தார் கன்னடியர். பிராம்மணர் திருப்பிக் கொடுத்த மூட்டையிலே வெறும் துவரம் பருப்புத்தான் இருந்தது. பிரும்மச்சாரி திகைத்துத் தனக்குத் தானம் கொடுத்த மலையாள அரசரிடம் போய் முறையிட்டார். அவருக்கு சிவாச்சாரியாருக்குத் தாம் குற்றம் இழைத்து விடக் கூடாதே என்ற பயம். அதனால் அவரைத் தாம் பூஜை செய்யும் லிங்கத்தைத் தொட்டுக் கொண்டு சத்தியம் செய்து விட்டால் போதும் என்று கூறிவிட்டார். குருக்கள் சம்மதித்தார். அவர் சாஸ்திரங்கள் படித்தவர். அதனால் அன்றிரவு சிவலிங்கத்தின் சக்தியை, சிவ சக்திகளைத் தம் மந்திரசக்தியால் அப்படியே இழுத்து எதிரே இருந்த மரத்தில் ஆவாஹனம் பண்ணி விட்டார். இப்போது லிங்கம் வெறும் கல்தான் என்று ஆகிவிட்டது. இதே சமயத்தில் ஈசன் கன்னடியரின் கனவில் "நாளைய தினம் நீ குருக்களிடம் கோவில் எதிரில் உள்ள புளிய மரத்தைத் தொட்டுக் கொண்டு பிரமாணம் செய்தால் போதும், என்று சொல்லிவிடு!" என்று கூறிவிட்டார்.

அதேபோல சபையோர் கூடியிருந்த கோவிலில் பிரும்மச்சாரி சொல்ல சிவாச்சாரியார் வேறு வழியில்லாமல் பச்சை மரத்தைத் தொட்டுக் கொண்டு சத்தியம் பண்ணினார். உடனே அந்த மரம் பற்றி எரிந்தது. சிவாச்சாரியாரும் நீறாகி விட்டார். அரசன் பொன் மூட்டையை மீட்டுக் கொடுத்த பிறகு அந்தக் கன்னடிய பிரும்மச்சாரி நீண்ட கால்வாயை வெட்டி முடித்ததோடல்லாமல் மிஞ்சிய பொன்னை வைத்துச் சத்திரமும் கட்டினாராம்.

தாணுகேச்வரர் சந்நிதியில் நிற்கும்போது இப்படி ஒரு பரோபகாரியும் இப்படி ஒரு அரசரும் இருந்த ஊர் இது என்று மகிழ்ச்சியடைகிறோம். எதிரில் இருந்த தூண்தான் எரிந்து போன மரம் என்றும் கோபத்தால் எரித்த பரமேசுவரனைச் சாந்தப்படுத்துவதற்காக எதிரே சாந்தமூர்த்தியான நாராயணனைப் பிரதிஷ்டை செய்திருப்பதாகவும் கூறுகிறார்கள்.

தாணுகேச்வரரை, எரித்தாட்கொண்டாரை பயபக்தியுடன் தரிசிக்கிறோம். ஆமாம்! இப்படிப்பட்ட சக்தி வாய்ந்த பரமேசுவரனுக்கு ஒரு பித்தளைக் குடத்தில் நீர் கொண்டு வந்து அபிஷேகம் செய்யக் கூடாதா? ஒரு இரும்பு வாளியால் தண்ணீரை ஊற்றுவது என்னவோ போல் இருக்கிறது. அம்பாஸமுத்திர அடியார்கள் கவனிக்கலாம்.

மீண்டும் ஒரு முறை ஷண்முகநாதரைத் தரிசித்துக் கொண்டு வரும் போது ஒரு அடியார் சிலையைப் பார்க்கிறோம். "இவர் யார்?" என்று கேட்டதற்கு "இவர்தான் கன்னடியன் கால்வாய் வெட்டிய பிரும்மச்சாரி" என்றார் குருக்கள்.



"எனது, பதினொரு வயதுக் கால்பந்தாட்டக் கில்லாடி. அவன், ஒரு நாள் உலகிலே மிகச் சிறந்த 'ஃபார்வர்டு' ஆவான்!"

# போர்ன்விடாவின் இனிமைக் காலம்

**போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள் நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்!**

வளரும் குழந்தைகள் வேறு எந்த மால்ட்டட் பானங்களையும்விட போர்ன்விடாவை விரும்புவதேன்? போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு தலைமுறையினர் தங்களுடைய குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர வேறு எதுவும் உகந்ததல்ல என்று வலியுறுத்திக் கூறுவதேன்?

அதில்... உற்சாகம் தள்ளும் சுவை மட்டுமல்ல. காட்பரீஸின் பிரபல பெயர் மட்டுமல்ல. அவற்றைவிட அதிகமோ அதிகம். அதுதான், போர்ன்விடா! அதோடு வளருங்கள்.

கிலோ பேகிலும் கிடைக்கிறது. அதன் உள்ளே ஒரு **இலவசக்** குவளை.

காட்பரிஸ்

**போர்ன்விடா**

நல்ல வளர்ச்சி,
போர்ன்விடா பயிற்சி.




OBM/3784 TAM



கே. நட்ராஜ்

3

**இந்த வாரம்**

**கதை, வசனம், பாடல்கள் டைரக்ஷன்**

**வே**தனை என்று சொல்லவில்லை போன வாரம். அது - கதையைப் பற்றித்தான்.

அருவி மாதிரி முதலில் சளசளவென்று கொட்டி, பின் ஓடை மாதிரி சலசலவென்று நடைபோட்டு – எங்கேயும் தொய்வில்லாத கதை. அதுவும் 'இந்த ஆசிரமத்தில் உன் குழந்தையை விட்டேன்' என்று கமலா காமேஷ் சொல்வது நல்ல டர்னிங் பாயின்ட் தான். இருந்தாலும் கதை விறுவிறுப்பாக இருக்க வேண்டும் என்பதற்காக ரோஸிக்கு ஹிருதய நோய் என்று சொல்லி நெஞ்சுக்குள் ஈட்டியைச் செருக வேண்டுமா என்ன? அந்தச் சின்ன மலர் வாடப் போகிறது என்ற எதிர்பார்ப்புடன் மீதிப் படத்தைப் பார்க்க வைத்து – மறுபடியும் அடித்துச் சொல்லலாம், வேதனைதான்! அதுவும் அம்பிகா விஷயத்தைக் கேள்விப்பட்டவுடன் ரோஸியின் நெஞ்சில் காதை வைத்து, இதயத் துடிப்பைப் பார்க்கும் போது இங்கே நம் நெஞ்சு படபடக்கிறது.

'அவனே பேசிட்டா, உனக்கும் பேச வந்துடும் கவலைப்படாதே' என்று ஊமைப் பெண்ணுக்கு ஆறுதலாய்ச் சொல்லப்படும் வசனம்,

'பத்து மாசம் நீ வயத்திலே சுமந்தே– எட்டு வருஷம் நான் நெஞ்சிலே சுமந்தேன்' என்று மதர் மணிமாலா சொல்லும் வசனம்,

–'தூயவன் நிறையப் பாடுபட்டிருக்கிறார்.

டைரக்ஷன் கே. நட்ராஜ். முதல் படம் என்று சொல்கிறார்கள். அப்படித் தெரியவில்லை.

அனாதை இல்லத்தில் ரஜினியின் வருகை பற்றிக் கேள்விப்பட்டதும் எல்லாக் குழந்தைகளும் (பெரிய குழந்தைகளும் கூடத்தான்) குதிக்க அந்தக் குருட்டுப் பையன் மட்டும் தனியாய் முழிப்பது! – டைரக்டோரியல் டச் என்றால் ரியல் டைரக்டோரியல் டச்!

இந்தியா மேப்பில் டமாரம் அடிக்கிற பொம்மையை வைத்து விஷயம் பரவுவதை சிம்பாலிக்காகக் காட்டுகிற சீனும் சரி, அம்பிகாவின் பிம்பம் விரிசல் அடைவதும், அம்மா என்று குழந்தை கூப்பிட்டவுடன் அது இணைவதும் – இந்த டைரக்டர் விஷயம் தெரிந்தவர் டோய் என்று சொல்லவைக்கின்றன. இந்த அனுமனுக்குத்தம் பலம் தெரிந்திருக்கிறதோ என்னவோ நமக்குத் தெரிகிறது. விசுவரூபம் எடுக்கப் போகிறார்.

**ஜெயமன்மதன் ஆலோசனைகள்:**

1. வீட்டில் உள்ள குழந்தை குட்டிகளுடன், பெரியவர்களும் சேர்ந்து இப்படத்திற்கு ஒரு முறை போய் வரலாம்.

2. 'இந்தப் படத்திற்கும்' வரி விலக்கு அளிக்கலாம்.

3. எல்லாப் பாடல்களுக்கும் இனிமையாக இசையமைத்திருக்கும் இளையராஜாவிற்கு விரும்பியவர்கள் விரும்பிய பட்டம் அளித்து மகிழலாம்.

–முற்றும்

# அன்புள்ள ரஜினிகாந்த்








# நிரபராதி

**தா**லி கட்டி, மாலை மாற்றி காரில் வீட்டுக்கு வரும் போது மாமனாரைப் பற்றி மிகவும் உயர்வாய்ச் சொல்லி—

கொஞ்சம் கூட சந்தேகமே எழவில்லை; அந்தப் படம் அப்படி ஒரு திருப்பத்தைச் சந்திக்கப் போகிறதென்று.

ராணி பத்மினி பாட்டிலை உடைத்து கண்ணகி மார்க் சாபத்தைக் கொடுத்து விட்டு அத்தனை சிரிப்பு முகங்களுக்கும் நடுவே ரத்தம் சிந்தி சாகும் காட்சி...

ஆரம்பித்த அமைதி என்ன? அடுத்த சில நிமிடங்களுக்குள் ஆன கதி என்ன?

கிழ மனிதர் கண்களில் அபார பேராசை.

அப்புறம்தான் மாதவியின் பிரவேசம்.

சென்னைக்கு வந்து இறங்கியவுடனேயே ஒருவனால் 'கடத்தப்பட்டு' நான்கு, ஐந்து பேருக்கு விலை பேசப்படுகிறார். கற்பிழக்கிறார். பல்லி துடிக்கிறது (அருவருப்பு!) அப்புறம் மயக்கத்திலிருந்து உகை விளிம்புக்கு வந்து உண்மை புரிந்து ஷவரக் கத்தியை எடுத்து, கடத்தி வந்தவனை 'சர்ரக்' என்று சீவுகிறார். கழுத்தருகே ரத்தப் பூக்கள் பூக்கும் அந்த முதல் கொலையும் சரி; அப்பாவியாக லிஃப்டில் இறங்கும் வி.கே ஆர். கழுத்தறுபட்டு சாகும் அந்த இரண்டாவது கொலையும் சரி, இரவில் கண்ணைக் கிலைக்குப் பின்னால் நடக்கும் அந்த மூன்றாவது கொலையும் சரி நல்ல விறுவிறுப்பு தான்.

இன்ஸ்பெக்டர் மோகன், மாதவியை நோக்க, மாதவியும் இன்ஸ்பெக்டர்மோகனை நோக்க...

'ராதா'—

'ராஜா' என்று ஃப்ளாஷ்பாக்கில் பாட்டுப் பாட ஓடிவிடுகிறார்கள்.

அவ்வப்போது கதையில் டெம்போ நடையைக் கட்டும் போது இந்தப் பாட்டு வந்து விடுகிறது. அப்படித்தான் வெகு சாமர்த்தியமாகச் செருகப்பட்டுள்ளன அனு ராதா, சில்க் டான்ஸ்.

'ஆபரேஷனுக்கு முன்னால் மயக்க மருந்து கொடுக்கறதில்ல அதே மாதிரிதான் இதுவும். குடி' என்று சாராயத்தை சத்யகலாவின் வாயில் ஊற்றும் க்ளோஸ் சட் வி.கே. ராமசாமி — நல்ல சாடிஸ்ட்.

'டர்ட்டி படவா' என்று கூறிக்கொண்டு லத்தி சுழற்றும் போலீஸ் வேலை மனோரமாவுக்கு. அவர் ஸ்டண்ட் சீனில் புகுந்து விளையாடுவதும் சரி, வசனங்களால் பொறிந்து தள்ளுவதும் சரி, ஜோர்தான்! அனுராதாவுடன் இணைந்து ஆடும் டான்ஸ் ஸீனில்தான் அவரைப் பார்க்கக் கஷ்டமாயிருக்கிறது. இந்த வயதிற்கு மேல் இது வேறு எதற்காம் அனுவசியமாய்?

ஆ, ஊ என்றால் காதலர்கள் பீச்சாங் கரையில் ஓட்டம். எப்போது தான் நம் டைரக்டர்களுக்கு வேறு சிச்சுவேஷன் கிடைக்கப் போகிறதோ?

'அதென்ன அது ஊரில் இருக்கும் 'பிம்ப்'கள் எல்லாம் கொலை செய்யப்படுகிறார்களே''

'ஒரு வேண்டுதல் போல இருக்கு.'

ஆரூர்தாஸின் வசனம் இந்த மாதிரி அவ்வப்போது புன்னகை பூக்க வைக்கிறது.

சங்கர் – கணேஷ் நன்றாகச் செய்திருக்கும் இரண்டு பாடல்களும் (அனுராகா டான்ஸ் பாட்டு சிலுக்கு டான்ஸ் பாட்டு, ரேடியோவில் என்னவோ இடம் பெறப் போவதில்லை. குறிப்பிட்டு என்ன ஆகப்போகிறது.

மனோதத்துவ ஞானியின் உரை வெகு நீளம் தான் என்றாலும் சுஜாதா உரை நிகழ்த்தும் தோரணையைப் பார்த்தால் இன்னும் நீளமாய் இருந்திருந்தாலும் கூடப் பரவாயில்லை என்று சொல்ல வைக்கிறது.

ஏதேது மோகன் பாடல் காட்சிகளில்கூட தலையை எல்லாம் ஆட்டி உணர்ச்சி பூர்வமாக நடிக்க ஆரம்பித்து விட்டார்.

துணிச்சலான பாலாஜியின் துணிச்சலான இறக்குமதிதான் என்றாலும் படத்தைப் பார்த்தால் சென்னையில் இருக்கிற ஆண்கள் அத்தனை பேரும் 'பிம்ப்'கள் என்று சொல்கிற மாதிரி இல்லை?

— ஜெயமன்மதன்

குளோஸ் அப்

# பழி வாங்கிய பாஸ்கர ராவ்



"நல்ல உடற்கட்டு; என். டி. ராமராவை விட மிடுக்கான தோற்றம்; (வயது 49) சிறிய – ஆனால் நரியின் தந்திரம் ஒளிர்கிற கண்கள்; ஆந்திராவின் சம்பிரதாயமான வேஷ்டி; ஜிப்பா; மனத்திலே ஏராளமான ஆசைகள். இதுதான் பாஸ்கர ராவ்.

சென்னாரெட்டியின் அமைச்சரவையில் இடம் பெற்றிருந்த போது, அவருக்குத் தொல்லைகள் தந்தவர். பின் அஞ்சையா மந்திரிசபையிலும், தொல்லைகள் தொடர்ந்து தந்ததன் விளைவாய் அமைச்சரவையிலிருந்து நீக்கப்பட்டவர். ஆனாலும் மிகச் சிறந்த நிர்வாகி. நிதி திரட்டுவதிலே மன்னன். தன்னை இ. காங். பழிவாங்கி விட்டதாய் நினைத்து, பதிலுக்குப் பழி வாங்கத் தக்க சமயத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தவர். அவருக்குக் கிடைத்த கருவி தெலுங்குதேசம்.

என். டி. ஆரைக் கட்சியின் இதயம் என்றால், நாதெண்ட்ல பாஸ்கரராவ்தான் மூளை. கட்சியின் ஆரம்ப காலம் முதலே தேர்தல் பிரச்சாரம் உட்பட எல்லாவற்றையும் இரண்டு பேரும் சேர்ந்து செய்யவே எதையும் பிசிறு இல்லாமல் செய்து முடிக்க முடிந்தது.

ஆனால் என். டி. ஆர்., உபேந்திராவுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தது, பாஸ்கர ராவுக்குத் துளியும் பிடிக்கவே இல்லை. ஆனால் இதை வெளிப்படையாய் அவர் சொன்னதில்லை. என். டி. ஆருக்கு அரசியல் தெரியாது என்று கேஷுவலாய்ப் பேசும் போது இடித்துக் காட்டி இருக்கிறார். தவிர 'பிரகசிக்கக் கூடாது' என்று சொல்லி அவர் என். டி. ஆரை விமர்சித்தது ஏராளம். இது தெரிந்துதானோ என்னவோ, என். டி. ஆரும் இவரைக் கொஞ்சம் தள்ளியே வைத்திருந்தார்.

பாஸ்கரராவ் பத்திரிகையாளர்களைச் சமாளிப்பதில் சமர்த்தர். எந்தவிதமான கேள்விகள் கேட்டாலும் பளிச்சென்று சாமர்த்தியமாய்ப் பதில் சொல்லித் தப்பித்துக் கொள்வார். அவரைக் கேள்வி கேட்டு மடக்குவதென்பது கஷ்டமான காரியம்.

பாஸ்கரராவ் முதல்வராய்ப் பதவி ஏற்றதும், ஹைதராபாத்துக்குப் பறந்தேன். காலை ஆறரை மணிக்கே அப்பாயிண்ட்மெண்ட் ஏதும் இல்லாமல் நேராக அவர் வீட்டுக்கே போய் பேட்டி என்றதும் உடனடியாக ஓ. கே. என்றார். வழக்கம் போலவே பளிச் பளிச்சென பதில்கள். 'அரசியல் என்பது, ஒருவரை ஒருவர் ஒழித்துக் கட்ட ஆடுகிற விளையாட்டு' என்பதை வெளிப்படையாய் ஒப்புக் கொண்டார்; இந்திராவுக்கும், இப்போதைய ஆந்திர விவகாரத்துக்கும் சம்பந்தமில்லை என்றார் (நம்பலாமா?) கவர்னரையோ, பிரதமரையோ இதுவிஷயத்தில் குறை சொல்லக் கூடாது என்றார்.

"நீங்கள் முதல்வராய் நீடிக்க முடியும் என்று நம்புகிறீர்களா?" என்ற கேள்விக்குப் பதில்: "எனக்குத் தெரியாது. ஆண்டவனுக்குத் தான் தெரியும்."

"இந்திராவுக்கு என். டி. ஆரைப் பதவியிலிருந்து இறக்கி விட வேண்டும் என்பதுகுறி. அதற்காக உங்களை ஆதரிக்கிறார். காரியம் முடிந்து விட்டது. உங்கள் காலை வாரி விடப் போகிறார்; நீங்கள் ஆந்திராவின் சரண்சிங் ஆகப் போகிறீர்கள்!" என்றேன்.

அதற்கு அவரது நிதானமான, அழுத்தமான பதில்: "திருமதி காந்திக்கு அப்படி ஒரு எண்ணம் இருந்தால், அதை எப்படி சமாளிப்பது என்று எனக்குத் தெரியும்!"

இன்றைக்கு பாஸ்கரராவ் மக்களின் வெறுப்பைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார். ஆனால்–என். டி. ஆர். இவருக்கு நன்றி சொல்ல வேண்டும். தமது ஆட்சி குறித்து மக்களிடையே லேசான முணுமுணுப்பு தோன்ற ஆரம்பித்த சமயத்தில், மீண்டும் அளவிட முடியாத அபிமானமும், அனுதாபமும், பிராபல்யமும் ஏற்பட வழி செய்ததற்காகத் தான்!

அனிதா பிரதாப் சொல்ல

எஸ். சந்திரமௌலி.

அனிதா பிரதாப் போட்டோ: சேகர்



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

# தேநீரும் விருந்தோம்பலும் ஸாகர் ஸ்கிம் மில்க்கும்

உங்கள் இல்லத்திற்கு வருகை தரும்
நண்பருக்கு முதலில் வழங்குவது எது ?
நல்வரவு என்று சொல்லும் புன்னகையும்
நல்லதொரு கோப்பை தேநீரும் தானே !
அது வழி வழியாய் வரும் உங்களுடைய
கலாசாரத்தின் பிரதிபலிப்பு.

இம்மாதிரி சமயங்களில் பால்பாட்டில்
காலியான பரிதவிக்கும் நிலையில் நீங்கள்
இருந்தால் ? உடன் புதிய பால் கிட்டாத
நிலையானாலோ ?

ஸாகர் ஸ்கிம் மில்க் பவுடர் உங்கள்
பாரம்பரிய விருந்தோம்பலை நீங்கள் பேண
உதவுகிறது. சிக்கனமாக, விரைவாக,
எளிதாக. இனிப்புகளுக்கும் புட்டிங்கு
களுக்கும் இது ஈடு இணையற்றது.




ASP/SMP/5/84

# ஸாகர்

## ஸ்கிம் மில்க் பவுடர்

கொழுப்பு இல்லாத பாலின் உன்னதமான
குணங்கள் உண்டே இதில்.



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங்
பெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10,
ஆனந்த 388 001, குஜராத்.

